# சாரோ தாம் யாத்ரீ மஹாத்மீயம்





கரம் சிங் அமர்சிங்

புத்தகக்கடை படா பஜார் ஹரித்துவார்

# அடக்கம்





# சாரோ தாம் யாத்ரீ மஹாத்மீயம்

## உத்தரகண்டத்திற்கு யாத்திரைக் கையேடு

பிரசுரகர்த்தர்
&
பதிப்புரிமை



கரம்சிங் அமர்சிங்
புத்தகவிற்பனையாளர்
பெரியகடை வீதி,
ஹரித்வார் - 249 401.

தமிழாக்கம்
(இந்தப் புத்தகம்
இந்த விலாசத்திலும்
கிடைக்கும்)

கோ. தேசிகநாத்தம்
5/15. ஷவி ட்பூ
அபார்ட்மெண்ட்ஸ்
கீழ்ப்பாக்கம் தோட்டம்
ரோடு, இரண்டாவது தெரு,
சென்னை - 600 010.
போன் : 616964

விலை ரூ.
(Price Rs. 20/-

# முகவுரை

அன்பும் பண்பும் நிறைய மனமுடை அன்பனால் படைக்கப்பட்ட ஸ்தல மூர்த்தி தீர்த்தம் ஆகியவைகளின் பெருமையும் சுற்றுலாக்காட்சிக்கும் உலகம் தேடும் நிலையில்லாது திறமையான மனமுடன் கண்டுகளிக்க வடித்ததை என் மனம் நிறை அந்தர் யாமியின் அருளாகியிருந்து ஓங்கவும் பரிந்து கேட்டு ரக்ஷிக்கவும் வேண்டி என் உளம் கனிந்த ஆசிகள்.

இப்படிக்கு

ஸத்ய ஜிதாநந்த

# கடவுளர் உறையும் இடம்

மத்திய ஹிமாசலத்தில் உத்தரப்பிரதேசத்தில் சமோலி(Chamoli) உத்தரகாசி, பித்தோர்கர்,(Pithoragarh) நைனிடால், (Nainital) அல்மோரா, (Almora) பௌரி, (Pauri) தெஹ்ரி (Tehri) மற்றும் தேராதூன் (Dehradun) என்ற ஜில்லாக்களைக் கொண்டது உத்தரக்கண்ட் இவைகளில் எண்ணிலடங்கா புனிதமான கோவில்கள், புராண முக்கியத்துவங்கள் வாய்ந்த இடங்கள், புனித நதிகள், உயர்ந்து நிற்கின்ற மலைகள், காடுகள், பள்ளத் தாக்குகள், பச்சை பசுமையான பிரதேசங்கள், கண்ணைப் பறிக்கும் எழில்மிகு இடங்கள் இந்த 'ஜில் லாக்களில் அடங்கும். முக்கியமாக புனித ஆலயங்கள் பத்ரிநாத், கேதார்நாத், கங்கோத்திரி யமுனோத்திரியில் உள்ளன. இந்த இடங்களில் தவமிருக்கும் முனிவர் கள், யோகிகள், துறவிகள், கடவுளிடையே ஈடுபாடு கொண்டவர்கள்.

வெளிநாட்டு உள்நாட்டு யாத்திரிகர்களை கவரக் கூடிய முக்கிய இடம் மலர்கள் பள்ளத்தாக்கு, இதிகாச பௌராணிக காலத்திலிருந்து முக்கியத்துவம் வாய்ந்த ஸ்தலங்கள் பூரிஜகன்னாத், இத் தலங்களுக்கு அளிக்கப் படும் முக்கியத்துவமும், நம்பிக்கையுமே இவைகளைத் தரிசிக்க யாத்ரீகர்களை தூண்டுகின்றன. ஆனால் எல் லோரும் முதலில் செல்ல விழைவது பத்ரிநாத்துக்குத் தான். ராமேஸ்வரம், துவாரகா, பத்ரிநாத் ஆகும்.முன் காலங்களில் பத்ரிநாத் செல்வதென்பது மிகவும் கடின மாக இருந்தது. பஸ்களோ (பேருந்து), வேறு எந்த வாகனமோ, கிடையாது. ஏன்! நடந்து செல்ல நல்ல பாதை கூடக் கிடையாது.

ஆனால் இப்போது ரிஷிகேசத்திலிருந்து பத்ரிநாத் மற்றும் பல இடங்களுக்கு சௌகரியமாகச் செல்ல எல்லாவித வசதிகளும் அமைந்திருக்கின்றன.

# பாகம் I

## முக்கியமான தகவல்கள்

பத்ரிநாத் கேதார்நாத், யமுனோத்திரி கங்கோத்ரி இடங்களுக்கு வெற்றியுடன் சென்று வர யாத்திரிகர் களுக்கு கீழே உள்ள தகவல்கள் கொடுக்கப்பட்டிருக் கின்றன.

ஏப்ரல் 15 தேதியிலிருந்து ஜூலை 31 வரை, மற்றும் செப்டம்பர் அக்டோபர் மாதங்கள் ரிஷிகேசம், பத்ரிநாத், கேதார்நாத், கங்கோத்திரி, யமுனோத்திரி இடங்களுக்குச் செல்ல சிறந்த மாதங்கள்.

*பஸ்வசதிகள்* - ஹரித்துவார், ரிஷிகேசம் முதலிய இடங்களிலிருந்து நேராக பத்ரிநாத் சென்று வர பஸ் வசதிகள் உள்ளன. சர்க்கார் பஸ்கள் மற்றும் சுகல சௌகரியங்களோடு சென்று வர பல தனியார் பஸ்களும் உள்ளன. மற்றும் டூரிஸ்ட் டாக்சிகளும் (Tourist Taxis) மினிபஸ் என்ற குறைந்த எண்ணிக்கை யோடு போகும் பஸ்களும் உள்ளன. ஜோஷிமத் என்ற இடத்திலிருந்து பத்ரிநாத் பாதையில் நுழைவாய் (Gate) ஒன்று அமைந் துள்ளது. இது காலை 6.30 மணியிலிருந்து மாலை 4.30 மணிவரையும் திறந்திருக் கும். சமச்சீராக இல்லாமல் திடீர் ஏற்ற இறக்கங்களுடன் உள்ள பாதைகள் நன்கு பராமரிக்கப்பட்ட நிலையில் உள்ளன.

கேதார்நாத் செல்லும் பயணிகள் முதலில் ருத்ர பிரயாகைக்குப் பஸ்ஸில் செல்ல வேண்டும். இங்கிருந்து

பல வழித்தடங்களில் கௌரி குண்டம் (Gauri Kund) போக பஸ் வசதிகள் உள்ளன. கௌரி குண்டத்தி லிருந்து (Gauri Kund) கேதார் நாத்திற்கு உள்ள தூரம் 14 கி.மீ இந்த 14 கி.மீ தூரத்தை நடந்தும், தண்டிகள் (பல்லக்குகள்) மூலமும் குதிரை கள் மீதும் கடக்கலாம். ரிஷிகேசத்திலிருந்து கௌரி குண்டத்திற்கு (Gauri Kund) மொத்தம் தூரம் 211கி.மீ.

*யமுனோத்திரிக்குமோட்டார் பஸ் வசதி* :- யாத்திரிகள் ரிஷிகேசத்திலிருந்து ஹனுமாஞ்சட்டி (Hanuman Chatti) வரை 211கி.மீ பஸ்களில் செல்ல வேண்டும். அங்கிருந்து அதாவது ஹனுமாஞ்சட்டி யிலிருந்து *13 கி.மீ தூரத்தில் உள்ள யமுனோத்திரியை நடந்து சென்றடைய* வேண்டும்.

*கங்கோத்திரிக்கு கார் வசதி* : ரிஷி கேசத்திலிருந்து லங்காச்சட்டி என்ற இடம் வரை 248 கி.மீ தூரத்தை பஸ், கார்களில் செல்லலாம். அங்கிருந்து கங்கோத்திரிக்கு 13 கிலோ மீட்டர் தூரம் நடந்து செல்ல வேண்டும்.

*சில முக்கியமான இடங்களுக்கு உள்ள தூரங்கள்:-*

| | | |
|---|---|---|
| ரிஷிகேசத்திலிருந்து | பத்ரிநாத் வரை | 298 கி.மீ |
| ரிஷிகேசத்திலிருந்து | கௌரி குண்டம் | 211 கி.மீ |
| ரிஷிகேசத்திலிருந்து | ஹனுமாஞ்சட்டி | 211 கி.மீ |
| ரிஷிகேசத்திலிருந்து | லங்காச்சட்டி | 235 கி.மீ |
| சயானாச்சட்டியிலிருந்து | லங்காச்சட்டி | 209 கி.மீ |
| லங்காச்சட்டியிலிருந்து | கௌரி குண்டம் | 352 கி.மீ |
| கௌரிகுண்டத்திலிருந்து | பத்ரிநாத் | 231 கி.மீ |
| பத்ரிநாத்திலிருந்து | ரிஷிகேசத்திற்கு | 298 கி.மீ |

பத்ரிநாத், கேதார்நாத், கங்கோத்திரி மற்றும் யமுனோத்திரிக்குச் செல்லும் பாதைகள் (Roads) நன்கு பராமரிக்கப்பட்டு வருகின்றன. முக்கியமான பெரிய ஊர்கள் தார் ரோடுகளால் இணைக்கப்பட்டுள்ளன. சிறிய சாலைகள் அதாவது குப்த காசியிலிருந்து கௌரி குண்டம் வரை (31.கி.மீ) கங்கோத்திரியி லிருந்து ஹனுமாஞ்சட்டி (27 கி.மீ) சாலைகள் தார் ரோடாக இல்லாவிட்டாலும், எவ்வித வாகனங்களும் செல்ல ஏற்றவை. ஆனால் மழைக்காலங்களில் இந்தச் சாலைகளில் முற்றிலும் எந்த விதமான கார், அல்லது ஜீப் எந்த வாகனங்களும் செல்ல முடியாது.

*செல்லும் யாத்திரிகர்களுக்கு சில யோசனைகள் :-*

யாத்திரையின் போது எடுத்துச் செல்ல வேண்டியவைகளில் முக்கியமானவை:- ஈரம் தாக்காத (Water proof) தரை விரிப்புக்கள், மலைப் பாதைகளில் செல்வதற்கேற்ற நல்ல காலணிகள் (Trekking shoes) நல்ல கம்பள கால், கை, தலை உறைகள், உறை போர்த்திக் கொள்ளக் கூடிய கம்பளங்கள், கம்பளத்தினால் ஆன அங்கிகள், டவல்கள் (Towels) கொதிக்க வைத்த குடிநீர், சிறிய முதலுதவி பெட்டி. இவைகளில் மிக மிக முக்கியமானவைகள், டார்ச் விளக்கு, (Torchlight) அவை களுக்கு உள்ள செல்கள் (Spare cells), கங்கோத்திரியிலும் யமுனோத்திரியிலும் மின்சார விளக்குகள் கிடையாது. கேதார்நாத் பத்ரிநாத் இடங்களில் மின்சார வசதிகள் உள்ளன.

## (Market) சந்தைகள், கடைவசதிகள் :-

ஹரித்துவார், ரிஷிகேசம், உத்தரகாசி, தெஹ்ரி (Tehri) கோப்பேஷ்வர் (Gopeshwar) ருத்ரபிரயாகை மற்றும் ஜோஷிமட் போன்ற ஊர்களில் பலவிதமான கடைகள் உள்ளன. இங்கு டப்பாக்களில் அடைக்கப் பட்ட உணவுகள், சமையல் எண்ணெய், பால் டப்பாக் கள், உருளைக்கிழங்கு, டீ, கறிகாய்கள், பழங்கள், சகாயமான விலைகளில் நிறையக் கிடைக்கின்றன. தபால் தந்தி வசதிகளும் வங்கிகளும் உள்ளன. இவைகள் யாத்திரிகர்களுக்கு மிக அவசியமானவை

தவிர அவரவர்கள் பண வசதிகளுக்குத் தக்கபடி வாகன வசதிகள் உள்ளன. குதிரை மூலம் செல்பவர் களுக்கு குதிரைச் சவாரி வசதி, கண்டி என்ற ஒரு ஆள் சுமந்து செல்லும் வசதி, கண்டியில் பிரயாணம் செய்வது சௌகரியமாக இருக்காது ஆனால் தண்டியில் பிரயாணம் சுகமாக இருக்கும். சாமான்களை தூக்கிவர கூலிகளை (Porter) அமர்த்திக் கொள்ளலாம். தண்டி என்ற வசதிகளும் ஆங்காங்கே உள்ளன.

சர்க்கார் நடத்தும் பயண விடுதிகள் பத்ரி, கேதார், கங்கோத்ரி, யமுனோத்ரி, செல்லும் எல்லாப் பாதைகளிலும் இருக்கின்றன. இவைகளில் தங்க பௌரிகர்வால் அல்லது தேஹ்ரி தர்பார், (P.W.D.) என்ஜினியர்களிடமி ருந்து 3 அல்லது 4 நாட்களுக்கு முன்பே அனுமதி பெற வேண்டும்.

இது தவிர பாபா காளிகம்ளிவாலா சத்திரங் களும் முக்கிய ஊர்களில் இருக்கின்றன. அங்கங்கே சில ஊர் முக்கியப் பிரமுகர்கள் காட்டேஜ் (Cottages) அமைத்துள் ளார்கள். காட்டேஜ்களில் சில, வேறு வசதி ஏதுமில்லாமல் தங்கிச் செல்ல மட்டுமே உப யோகமாகும். சில ஊர்களில் இந்தக் காட்டேஜ்களில் தங்குவோர்க்கு சமையல் செய்ய பாத்திரங்கள் கூட கிடைக்கும். கடைகளில் சமைக்கக் கூடிய பொருள் களும் கிடைக்கும். இவை தவிர பெரிய ஊர்களில் செலவழிக்கத் தட்டுபாடில்லாதவர்களுக்கு வசதியான லாட்ஜ்களும் நிறைய இருக்கின்றன. சில ஊர்களில் யாத்திரிகர்கள் தங்க ஆஸ்ரமங்களும் தர்ம ஸ்தாபனங்கள் நடத்தும் தங்குவதற்கு வசதியான இடங்களும் உள்ளன.

*ஆடைகள் துணிகள்* பனிபடர்ந்த இமய மலைப் பகுதியாகிய இவ்விடங்களில் குளிர் அதிகமாக இருக்குமாதலால், யாத்திரிகர்கள் கண்டிப் பாக கம்பளி ஆடைகள், அங்கிகள், போர்வைகள் படுக்கைகள் வைத்திருக்க வேண்டும். சில ஊர்களில் தர்மசாலாக்களிலும் கம்பளம், படுக்கைகள் தேவைப் பட்டவர்களுக்கு கொடுக்க ஏற்பாடு இருக்கிறது.

*உணவு வகைகள்* :- மிகக்குறைந்த நாட்கள் பிரயாணத்திற்கு பத்ரி, கேதாருக்கு அதிக மான உணவுகளை எடுத்துச் செல்லத் தேவை யில்லை. ஏனென்றால் டெஹ்ரி (Tehri) ஸ்ரீநகர், தேவப் பிரயாகை, கர்ணப்பிரயாகை, சமோலி போன்ற

இடங்களில் எல்லாவித தேவைக்கான பலவித உணவு வகைகள் அதிகமாகவே கிடைக்கின்றன. ஹரித்துவார், தேராதூன் போன்ற இடங்களில் கிடைக்கும் உணவு வகைகள் மற்ற தங்குமிடங்களி லெல்லாமே கிடைக்கின்றன.

*கூலிகள்* :- இந்தப் பிரதேசங்களில் பிரயாணம் செய்பவர்களுக்கு இந்த சாமான்களை கூடவே எடுத்துச் செல்லக் கூலிகள் ஒரு அவசியத் தேவை. பல இடங்களில் பதிவு செய்யப்பட்டக் கூலிகள் இருக்கிறார்கள். டெஹ்ரி, தர்பார்: தேராதூன் அதிகாரிகள், சகரான்பூர், கர்வால் போன்ற இடங் களில் பதிவு செய்யப்பட்ட (Registered) கூலி ஏஜெண்டுகள் பதிவு செய்யப்பட்ட கூலிகளை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். நாம் கொண்டு செல்லும் சாமான்கள் பெட்டிகளைத் தூக்கிச் செல்வதற்கு இந்தக் கூலிகள் அவசியம். பதிவு செய்யப்படாத கூலிகளை அமர்த்திக் கொண்டால் அதனால் பல விதங்களில் சங்கடங்கள், நஷ்டங்கள் ஆக வாய்ப்புக்கள் உண்டு. இது தவிர குதிரைகள், கண்டி, தண்டிகளின் மூலமாகவும் சாமான் கொண்டு செல்லப் பயன்படுகின்றன. குறைந்த சாமான்களை (Luggage) எடுத்துச் செல்வது நலம். குறைந்த சுமை, நிறைந்த சுகம்!

மலைகளில் ஏறுபவர்கள் சில சமயங்களில் அங்கு மிங்கும் மலைப்பிரதேச எழில்களைப் பார்த்துக் கொண்டே செல்லப் பிரியப்படுவார்கள்.

ஆனால் இவ்வாறு அங்குமிங்கும் பார்த்துக் கொண்டு ஏறுவது ஆபத்தானது. அதைத் தவிர்க்க வேண்டும். ஏனென்றால் மலையில் ஏறுபவர்கள் கீழே விழ ஏதுவாகும். இதைத் தவிர்க்க ஆங்காங்கு நின்று மலைகளின் எழிலை ரசித்து விட்டு மறுபடியும் ஏறத் தொடங்கினால் மிகவும் நல்லது. ஆபத்து களையும் தவிர்க்கலாம். குதிரைகள் போன்றவை களில் செல்பவர்களுக்கு இந்த பயம் இல்லை.

அதிக தூரம் பிரயாணம் செய்பவர்கள், மலை ஏறுபவர்கள் களைப்படையக் கூடும். களைப்பைத் தவிர்க்க வழியிருக்கிறது. பிரயாணிகள் உப்பு கரைக் கப்பட்ட சுடுநீரை கால்களில் ஊற்றிக் கொண்டு கால்களைக் கழுவிக் கொண்டு அதற்கு மேல் எண்ணெயைத் தடவிக் கொண்டால் கால்வலி களைப்பு பறந்தோடி விடும்.

*உத்தரக்கண்டத்தில் வெப்ப நிலை :* அடிக்கடி வெப்ப நிலைகளைக் கவனித்துக் கொள்வது கூட நல்லது. ஏனெனில் வெப்ப நிலை சீறாக எப்போதும் இருக்காது. திடீரென்று மாறி விடும். சில சமயங்களில் ஒரே மேகமயமாகவே இருக்கும். திடீரென்று பலத்த மழை பெய்யக் கூடும். சில சமங்களில் பனி மழை இருக்கும். ஏப்ரல், மே மாதங்களில் பலத்த காற்றும் மண்ணை வாரி அடிக்கும் காற்றும் கூட இருக்கும்.

*கோடையிலும் குளிர்:-* சாதாரணமாக யமுனோத்திரி கங்கோத்திரி., கேதார்நாத், பத்ரிநாத்

போன்ற இடங்களில் கோடையிலும் கூட குளிராக இருக்கும். மிக உயரமாக இருப்பதால் இந்தக் குளிர். சில சமயங்களில் ஏப்ரல் அக்டோபர் மாதங்களில் மிதமான குளிரும் ரசிக்கத்தக்க வகையில் நன்றாக அனுபவிக்கும்படி இருக்கும். ஆகவே இப்பிரதேசங் களில் யாத்திரைக்கு ஏற்ற மாதங்கள் மே முதல் ஜீன், செப்டம்பர், அக்டோபர் வரை. ஜூலையும் ஆகஸ்டும் மழைக் காலங்கள்.

*ஹரித்துவார் முதல் பத்ரிநாத் வரை:*
ஹரித்வாரிலிருந்து ரிஷிகேசம் வரை 24 கி.மீ இந்த இரண்டு ஊர்களிலும் ரயில்வே ஸ்டேஷன்கள் உள்ளன. இவைகள் சமுத்திர மட்டத்திலிருந்து 396 மீட்டர் உயரம். இந்த இரண்டு ஊர்களும் ரோடுகள் மூலமும் இணைக்கப்பட்டிருக்கின்றன. இந்த 2 ஊர் களுக்கிடையே டாக்சிகளும் பஸ்களும் போய் வந்த வண்ணம் பயணிகளுக்கு வசதியளிக்கின்றன. ரோடு மூலம் கோட்வாடா என்ற ஊரும், ரிஷிகேசத்தை இணைக்கிறது. பஸ் ரோடு வழியாக கோட்வாடா விலிருந்து ருத்ரப்பிரயாகை 171 கி.மீ ருத்ர பிரயாகையிலிருந்து பத்ரிநாத் 159 கி.மீ ருத்ர பிராயாகையிலிருந்து பத்ரிநாத் 159 கி.மீ.

உத்தரப்பிரதேச தேசியப் போக்குவரத்து துறை பஸ்கள் டெல்லியிலிருந்து ஹரித்துவார் வழியாக ரிஷிகேசுக்கு அடிக்கடி செல்கின்றன. இந்த பஸ்கள் ரிஷிகேசத்தையும் பத்ரிநாத்தையும் கூட இணைக்கின்றன. ரிஷிகேசத்திலிருந்து பத்ரிநாத்

அடைய $1\frac{1}{2}$ நாள் ஆகும். ஹரித்துவாரத்திலிருந்து கோட்த்வாரா என்ற இடம் வரை ரயில்கள் விடப்படுகின்றன.

ரிஷிகேசம், கோட்த்வாராவிலிருந்து கேதார்நாத்திற்கும் பத்ரிநாத்திற்கும் செல்ல இரண்டு மார்க்கங்கள் உள்ளன. ஒன்று, ரிஷிகேசத்திலிருந்து கௌரிகுண்டம், பஸ் முலம் 211 கி.மீ. இது தேவ பிரயாகை, ஸ்ரீநகர், ருத்ரபிரயாகை, தில்வாரா, அகஸ்த்முனி, குண்ட், குப்தகாசி, நளா, ஃபடா, ராம்பூர், சோன்பிரயாகை, கௌரிகுண்ட், பிறகு கேதார்நாத் வரை 14 கி.மீ மலை வழிப் பாதையில் நடைப்பயணம்.

இரண்டாவது - கோட்த்வாராவிலிருந்து கௌரி குண்ட் வரை, தோகட்டா, கும்கல், சம்புலி, பௌரி, ஸ்ரீநகர், ருத்ர பிரயாகை, வழியாக 236 கி.மீ பஸ்ஸிலும், ருத்ரபிரயாகையிலிருந்து கௌரி குண்டம் 72 கி.மீ பஸ்ஸிலும் செல்ல வேண்டும்.



## பாகம் II

# ஹரித்துவார்

கோவில்களில் முதல் நுழைவாயில் ஹரித்து வாரிலிருந்து ஆரம்பிக்கிறது. ஹரித்துவாரிலிருந்து புனித கங்கையானது பல பாகங்களாகப் பிரிந்து தரை மார்க்கமக ஓடத் துவங்குகிறாள்.

கேதார், பத்ரி வழியாக வரும் கங்கை யானவன் சிவாலிக் என்ற ஊரின் பாதத்திலிருந்து மேற்கொண்டு பயணமாகிறாள். இந்த சிவாவிக் என்ற இடம் சமுத்திர மட்டத்திலிருந்து 951 அடி உயரம்.

பல நூற்றாண்டுகளுக்கு முன் கபில மாமுனிவர் ஹிமயமலைப் பிரதேசங்களில் தவமிருந்த்தாகவும் அவர் தவம் இருந்த இடம் கபிலஸ்தலம் என்றும் மாயாபுரி என்றும் அழைக் கப்படுகிறது. 17ம் நூற்றாண்டில் இந்த இடம் கங்காதுவார் என்றழைக்கப்பட்டதாகச் சொல்லப் படுகிறது. மேலே உற்பத்தியாகும் கங்கை, மலை களைக் கடந்து இந்த இடத்திலிருந்து தான் கீழே இறங்குகிறது. ஆகவே இது கங்காத்வார் என்று அழைக்கப்படுகிறது. ஹரித்துவார் மிகவும் புனிதமான நகரம், பாரதத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் ஆயிரக்கணக்கான ஹிந்துக்கள் குறிப்பாக ஏப்ரல், மே மாதங்களில் வருகை புரிகிறார்கள். கங்காதசரா என்ற விழா நாளில் பல்லாயிரக்கணக்கான மக்கள் ஹரித்துவாரில் கூடுகிறார்கள். கங்கா தசரா நாளில்

தான் கங்கை முதன்முதலாக ஹரித்துவார் தரையைத் தொட்டதாக எண்ணி அந்த நாளை வருடா வருடம் கொண்டாடுகிறார்கள். சிவபிரான் இந்த நாளில் முதல் முதலாக கங்கையை முடியிலிருந்து கீழே விடத் தொடங்கினார் என்பது ஒரு ஐதீகம்.

ஏப்ரல் மாதம் இன்னொரு விதத்தில் முக்கியம் 12 வருடத்திற்கு ஒரு முறை வரும் கும்பமேளா ஏப்ரல் மாதம் தான் வருகின்றது என்று சொல்லப்படுகிறது. 6 வருடங்களுக்கு ஒருமுறை அர்த்த கும்பமேளாவும் கொண்டாப்படுகிறது ஹரித்துவாரில்.

## ஹரித்வாரில் முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் :-

*ஹரித்வாரில் பார்க்க வேண்டிய முக்கிய இடங்கள் :-* ஹர்கிபைரி, மிருத்தியுஞ்சய மகாதேவ், குருகுல் மஹாவித்யாலயா, குஷாவர்த்காட், மாயாபூர் அணை, சுபாஷ்காட், குருத்வாராசிங் ஷாபா, நீல்தாரா, பிரம்மகுண்டம், சப்தசரோவர், பாவன் தாம், ராகவேந்திரர் கோவில், கீதாபவன், பீம் கோடா. மற்றும் நாட்டிலே பாரதமாதாவிற்காக ஒரு கோவில் இருக்கிறதென்றால் அந்த பாரதமாதா மந்திர் இங்கே தான்.

முதன் முதலாக பார்க்க வேண்டியது ஹர்க்கிபைரி. அதாவது கங்கைக்கரையில் தினமும் சாயங்காலம் கங்கைக்கு கோலாகலமாக ஆரத்தி எடுப்பார்கள். கோவில்களிலிருந்து தீபாராதனை



गुप्त काशी Gupt Kashi



गंगोत्री मंदिर Gangotri Mandir



यमुनोत्री मंदिर Yamunotri Mandir



अर्द्ध नारेशवर मंदिर
Ardh Nareshvar Mandir


रुद्रनाथ Rudranath


मद्महेश्वर Madhyamaheshwar


कल्पेश्वर Kalpeshwar


श्री केदारनाथ Shri Kedarnath


तुंग नाथ Tung Nath

# पंच केदार



श्री वद्रीनाथ जी Shri Badrinath ji



वृद्धा वद्री Vraddha Badri

# पंचवद्री



भविष्य वद्री Bhavishya Badri



आदी वद्री Adi Badri



योगध्यान वद्री Yogdhyan Badri

# पंचप्रयाग



रुद्र प्रयाग Rudra Prayag



देव प्रयाग Dev Prayag



नंद प्रयाग Nand Prayag



कर्ण प्रयाग Karan Prayag



विष्णु प्रयाग Vishnu Prayag



श्री जगन्नाथ मन्दिर दर्शन

*Shri Jaganath Mandir*



श्री अमरनाथ दर्शन

*Shri Amarnath Darshan*



द्वारका नाथ दर्शन

*Dwarka Nath Darshan*



रामेश्वरम मन्दिर

*Rameshvaram Mandir*

பெரிய அளவில் மணியடித்து கரை முழுவதும் பெரிய பெரிய தீபங்கள் கங்கைக்குக் காண்பிக்கப் படும். தவிர மக்கள் ரூ 1, ரூ 2, கொடுத்து சிறிய இலை மடிப்புகளில் திரி எண்ணெய் வைத்து தீபம் ஏற்றி கங்கையில் விடுவார்கள். இதை தரிசிக்க ஆயிரக்கணக்கான மக்கள் கரையின் மேல் 2 மணி நேரம் முன்னதாகவே வந்து முன்னால் உட்கார்ந்து கொள்கிறார்கள். தவிர இந்தக் காட்சியை புகைப்படம் பிடிக்கவும், தரிசிக்கவும் திரளான மக்கள் கூடுவது பார்ப்பவர்களுக்கு மட்டற்ற காட்சியையும் மகத்தான மகிழ்ச்சியையும் கொடுக்கிறது. ஹர்க்கி பைரி கங்கைக் கரையில் மாலை வேளையில் நடப்பது இது.

இவைகளில் மிகவும் முக்கியமானது ஹர்க்கி பைரி என்ற கங்கைக்கரை. இதன் முக்கியம் என்ன வென்றால் ஹரி என்றால் விஷ்ணு பைரி கால்-பாதம் பத்ரிநாத்திலிருந்து ஹரித்துவாரம் வரையில் உள்ள விஷ்ணுவின்பாதம் ஹரித்வார் கரையில் அமைவதாக உள்ள ஐதீகம். அதனால் தான் தினமும் மாலையில் தீப ஆராதனை பாதத்தில் காண்பிப்பதாக கரையில் ஆரம்பித்து தீபம் கங்கையின் உயரம் வரை காண்பிக்கப்படுகிறது. உயர்ந்த விஷ்ணு பகவானுக்கு எடுக்கும் தீபாராதனை என்று கொள்ள வேண்டும். எல்லாப் பாபங்களையும் போக்கும் கங்கா மாதாவின் புனித நீருக்கு ஆரத்தி என்றும் கொள்ள லாம். எப்படிப்பார்த்தாலும் ஹர்க்கிபைரி தீபாராதனை பார்க்கப்பட்டு தரிசிக்க வேண்டிய ஒன்று.

அந்த ஆனந்தம் மாலை வேளையில் அங்கு சென்று பார்க்கும் போது தான் தெரியும். என்ன எழுதினாலும் வாயால் சொன்னாலும் போதாது. நேரில் பார்ப்பது தான் மகிழ்ச்சியையும் பக்தியையும் தரும்.

தவிர, ஹரித்துவாரத்தில் பல சம்பிரதாயத் தைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான துறவியர்கள், ஆஸ்ரமங்கள், உண்ண உணவு, தனியே இருந்து கரையில் உட்கார்ந்து கொண்டு தியானம் செய்ய, பாப சுமைகளைப் போக்கிக் கொள்ள பாக்கியம் எல்லாம் ஒருங்கே அமைந்த இடம் ஹரித்வார் இங்கே நூற்றுக்கணக்கான தர்மசாலாக்கள் உள்ளன.

ஒரு முக்கியமான கோவில் மானஸதேவி மந்திர் என்பது இது ஒரு மலையின் மேல் உள்ள கோவில். மின்சாரத்தால் இயங்கும் வின்ச் என்னும் தொட்டில்கள், பெட்டிகள், யாத்திரிகர்களை மலைக்கு எடுத்துச் செல்கின்றன. இது தவிர, ஸ்ராவண மகாதேவ மந்திர், வில்வகேசவர் மகாதேவர் கோவில், நீலேஸ்வரர் கோவில், நவக்ரஹக் கோவில், வராக கம்பா கோவில் போலாகிரி கோவில் இவை கள் தரிசிக்க வேண்டியவை.

ஹரித்துவாரில், நகரத்தை விளக்கும் பல விஷயங்கள் மற்ற இடங்களுக்குப் போகும் பாதைகள் புராணத்திலிருந்து ஒட்டிய பல விஷயங் கள் ரூட் மேப்புகள் எல்லாவித தகவல்களும் கொண்ட புத்தகங்கள் கிடைக்கின்றன. யாத்திரையின்

முக்ய நோக்கம். பக்திமார்க்கத்தில் சாந்நித்யம் அடையத்தான். இது நிறைவேறினால் பாபங்களி லிருந்து விமோசனம் அடைந்து நேர்மை, அன்பு, உண்மை, கலந்த வாழ்க்கை கிடைக்கும்.

பத்ரிநாத், கேதார்நாத் பாதையில் அடுத்து உள்ள புனித ஸ்தலம் ரிஷிகேசம். ஹரித்துவாரி லிருந்து 24 கி.மீ. தூரத்தில் கங்கைக்கரையின் வலது பக்கமாக அமைந்துள்ளது ரிஷிகேசம். இது ஹிந்துக்களுக்கு மிகவும் புனிதமான ஸ்தலமாகும் இது சிறிய ஊராக இருந்தாலும், ஹிந்துக்களுக்குப் புனித நீராடவும் தரிசிக்க பல கோவில்களும் உள்ளன. சத்திய நாராயணர்கோவில் மிகவும் பிரசித்தி பெற்றது. தவிர இங்கு நிறைய சாதுக்களும் மகான்களும் வாழ்ந்த, வாழுகின்ற இடம்.

ரிஷிகேசத்தில் சம்ஸ்கிருத பாடசாலைகள் பல உள்ளன. தர்மசாலாக்கள் கோவில்கள், க்ஷேத்ரங்கள் பல உள்ளன. பதின்மூன்று அடுக்குகள் உள்ள கோவிலும் பாரத்ஜி கோவிலும் இங்கு உள்ளன. இங்குள்ள திரிவேணி கூட்டத்தில் பிண்ட ஸ்ரார்த்தம் செய்வார்கள். பாபா காளிகம்ளிவாலா மடத்தின் தலைமையிடம் இங்கு தான் உள்ளது. இங்கிருந்து தான் உத்தரகண்ட யாத்திரை தொடங்குமிடம் எனவும் கூறலாம் ஏனென்றால் ஹரித்வார் சமவெளியில் இருந்தாலும் அதற்கு அடுத்து உள்ள க்ஷேத்திரம் ரிஷிகேசம் இங்கிருந்து தான் ஆரம்பம் என்று சொல்லலாம்.

## பத்ரி க்ஷேத்திரத்தின் புனித மகிமை :-

அருந்ததி தன் கணவரிடம் கேட்டாள், "ஓ பிரபுவே, எனக்கும் மற்றவர்களுக்கும் உபயோக மாகும் வகையில் ஸ்ரீ பத்ரிநாதனுடைய புனித முக்கியத்துவத்தை எடுத்துச் சொல்லுங்கள். பத்ரியை தூய பக்தி உள்ளத்தோடு தரிசித்தால் அதனால் என்ன நன்மைகள் கிட்டும்" என்று கேட்டாள். அதற்கு வசிஷ்ட மாமுனிவர் பதில் அளித்தார். பத்ரிநாத்தை தரிசிக்கும் எவனொருவனும் எப்படிப் பட்ட பாபியானாலும், அவன் பக்தியினால் புனித மடைந்து மோக்ஷமும் அடைகிறான். ஆனால் பத்ரிநாதரின் தரிசனம் கிட்டுவதென்பது அவ்வளவு சுலபமான காரியமாகாது. எவனொருவன் வாழ்நாள் முழுவதும் கடவுளைப் பிரார்த்திக்கிறானோ அவனுக்குத் தான் பத்ரிநாதன் காட்சியளிக்கிறான். அவனுடைய பாபம் அனைத்தும் போகும். அவன் உள்ளமும் மனதும் தூய்மையடையும். எல்லாக் குற்றங்களையும் புரிந்தவனும் வேறு எந்த க்ஷேத்ரத்தி லும் அவனுடைய பாபங்களிலிருந்து விடுபட வழி யில்லாதவனும் கூட பத்ரிநாதரின் கருணையினால் ஸ்வர்க்க லோகத்தில் சேர்கிறான்.

மேலும் மகரிஷி வசிஷ்டர் சொன்னார்: எவனொருவன் கங்கையில் நீராடிவிட்டு உடைகள், ஆபரணங்கள் முதலியவைகளை பத்ரிநாதருக்கு சமர்ப்பிக்கிறானோ அவனுக்கு மோக்ஷ லோகத்தில் நிச்சயம் இடம் கிட்டும். எவனொருவன் அகண்ட

தீபம் ஏற்றுகிறானோ அவன் மிகவும் சிரேஷ்டனாகிறான். எவனொருவன் பத்ரிநாதரின் கோவிலை வலம் வருகிறானோ கடவுளின் பாதார விந்தத்தைப் பற்றிக் கொண்டு பிரார்த்திக்கிறானோ அவனை பத்ரிநாதரே "புனித ஆத்மாவே, நீ ஒரு அஸ்வமேத யாகம் செய்த பலனையடைகிறாய்" என்று வாழ்த்துகிறார். பத்ரிநாதன் அவனை இருளிலிருந்து அறியமையிலிருந்து வெளிக் கொணர்கிறார். வசிஷ்டர் இவ்வாறு விளக்கினார்.

முழுமுதல் கடவுளான பகவான் விஷ்ணு, பத்ரியிலே கீர்த்தியுடன் கம்பீரத்துடன் அமர்ந்திருக்கிறார். அங்கு அவரை தரிசிக்கச் செல்லும் மக்கள் உண்மை யான நம்பிக்கையுடனும் பக்தியுடனும் சிரத்தையுடனும் சென்று பத்ரிநாதனை தரிசித்தால் நிச்சயம் அவர்களுக்குப் பலன் கிட்டும். மனிதனுடைய ஆத்மசாந்தி, அமைதி, இன்பம், மகிழ்ச்சி, எல்லாவற்றையும் ஒருங்கே கிடைக்கச் செய்யும் முக்கியத்துவம் வாய்ந்தது பத்ரிநாத்தும் அங்கு அமர்ந்துள்ள பகவான் பத்ரிநாதரும்.

கரம்சிங் அமர்சிங்
புத்தகவிற்பனையாளர்
பெரியகடை வீதி,
ஹரித்வார் - 249 401.

# பாகம் III

## பத்ரிநாத்

ஹிந்து இதிகாசங்களிலே குறிப்பிட்டபடி ஹிமாலய மலைப்பிரதேசங்கள் அனைத்துமே தவம், தியா்னம் செய்ய மிகவும் உகந்த இடங்கள். இதற்கு ஏராளமான காரணங்கள் உள்ளன. முதலாவதாக புனிதமான பத்ரிநாதன் க்ஷேத்திரமானது இந்தச் சாரலிலே அமைந்துள்ளது. ரிஷிகங்காவும் அலக்நந்தா நதிகளும் ஆரவாரமில்லாமல் அமைதியாக ஓடிக்கொண்டு இயற்கையான தென்றல் காற்றும் இயற்கைச் சூழலும் அமைதியுமுள்ள பிரதேசம். கடலுக்கு மேல் 3110கி.மீ மேலே உயரத்தில் உள்ளது. 3050-லிருந்து 3060மீ உயரத்தில் கங்கோத்ரி, யமுனோந்திரி, கேதார்நாத் அமைந்த எழில் நிறைந்த சுற்றுப் புறச் சுழல் பாதிக்காத இடம். இலந்தை மரங்கள் அடங்கிய காடுகள் சுற்றி இருந்ததால் இதற்கு பத்ரிவனம் என்றும் பெயர் (சமஸ்கிருதத்தில் "*பத்ரி*" என்றால் இலந்தைப்பழம்)

யோகிகளும் ரிஷி முனிவர்களும் தவஸ் ரேஷ்டர்களும் வாழ்ந்திருந்து இப்போதும் வாழ்ந்து கொண்டிருக்கும் இமய மலைப்பிரதேசம் அனைத்துமே புனிதமானது.

நீலகண்டம் என்ற உச்சியின் அருகிலே நர நாராயணர்கள் காத்துக் கொண்டிருப்பதாக ஐதீகம். நாரதகுண்டம், சூர்ய குண்டம் என்ற சூடான நீறூற்

றுக்களில் யாத்திரிகள் ஸ்நானம் செய்வது சாலச் சிறந்தது. அதிக உயரத்திலிருந்து விழும் வசுதரா நீர்வீழ்ச்சி பத்ரியிலிருந்து 4½ கி.மீ. தூரத்தில் உள்ளது. பத்ரிநாத் கோவில் சமீபத்தில் பின்பக்கம் உள்ள பள்ளத்தாக் கிலிருந்து நீலகண்டம் உச்சியைப் பார்க்க கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். வெண்பனி மலையான வெள்ளியை உருக்கி விட்டால் எப்படி பளிச்சிடுமோ அதுபோல் தோன்றும். கண்கொள்ளாக் காட்சி, ரம்யம் எல்லாம் ஒருபுறமிருக்கட்டும். சிவபெருமானை நேரில் தரிசித்தால் எப்படியி ருக்குமோ அந்த மாதிரி ஒரு எண்ணம் பார்ப்பவர் மனதில் நிச்சயம் உண்டாகும். அதிலும் காலை வேளையில் பார்த்தால் மிகமிக நன்றாகவும் மேலே சொல்லப்பட்ட இந்த எண்ணம் நிச்சயும் கிடைக்கும். பார்ப்பதற்கே ஒரு புனிதத்தன்மை தோன்றும்.

பத்ரிநாத் பூஜாரிகளைப் பற்றிப் பார்க்கலாம். பத்ரிநாத் பூஜாரிகள் கேரளாவிலிருந்து சென்ற நம்பூதிரிகளேயாவர். இன்றல்ல நேற்றல்ல. குரு ஆதிசங்கரர் ஏற்பாடு செய்து அக்காலத்திலிருந்தே இந்த பூஜாரிகளுக்கு பத்ரியில் பூஜை செய்யும் உரிமை ஏற்பட்டிருக்கிறது.

ஆதிகுரு ஆதிசங்கரரே கேரளாவைச் சேர்ந்த நம்பூத்திரி வகுப்பைச் சேர்ந்தவர்தானே. இந்தப் பூஜாரிகளை ராவல் என்று அழைக்கிறார்கள். இந்த 'ராவல்களை (பூஜாரிகளை) பத்ரிநாத்கோவில் கமிட்டி யும் தெஹ்ரி (Tehri) கார்வால் (Garhwal) மகாராஜாக் களும் நியமிக்கிறார்கள்.

கோவிலின் தலைமை செயல் அதிகாரி, ஜோதிடர்கள் பண்டிதர்களை கலந்து கொண்டு அவர்கள் ஆலோசனையின் பேரில் தான் கோவில் கடும்பனி மாதங்களுக்குப்பின் திறக்க வேண்டிய நாளை முடிவு செய்கிறார். சாதாரணமாக ஏப்ரல் கடைசியில் அல்லது மே மாதம் முதல் வாரத்தில் கோவிலானது பொது மக்கள் தரிசனத்திற்குத் திறந்து விடப்படுகிறது. குறிப்பாக கோவில் திறக்கும் நாளன்று அகண்ட ஜோதி தரிசன நாளாகவே இருக்கும்.அதற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. அது போலவே கோவிலை மூடுவதற்கும் அதாவது பனிக்காலம் ஆரம்பிக்கும் முன்னால் இதே முறை தான் அனுசரிக்கப்படுகிறது. கோவில் மூடும் நாள் கூட நவம்பர் மாதம் 2-வது வாரமாகவே இருக்கும். கோவிலை மூடுவதற்குண்டான பல சம்பிரதாய சடங்குகளை (பூஜாரி)ராவல் தான் செய்வார். பின்பு ராவல் மற்ற ஊழியர்களுடன் பத்ரியிலிருந்து இறங்கி ஜோஷி மட்டிற்குச் சென்று பனிக்காலம் முழுவதும் அங்கேயே இருப்பார். இது தலைமுறை தலை முறையாக செயலாற்றப்பட்டு வருகிறது.

முன்னாட்களில் ஹிமய மலைச்சாரலில் அனைத்து இடங்களுக்குச் செல்வது என்பது மிகக் கடினமாக இருந்தது. பல துஷ்ட மிருகங்கள் அடிக்கடி நடமாடக் கூடியதும் உண்டு. ஆனாலும் கூட அவைகளையும் மீறி ஆயிரக்கணக்கான பக்தர்கள், யாத்திரிகர்கள் ஒவ்வொரு வருடமும்

நாட்டின் எல்லாப் பகுதியிலிருந்தும் பத்ரிநாத்திற்கு விஜயம் செய்து கொண்டு தான் இருந்தார்கள்.

இந்தப் புனித பத்ரிநாதர் கோவில் எத்தனை ஆண்டுகளாக இருக்கின்றது என்பதற்கு சரித்திர பூர்வமான ஆதாரங்கள் ஏதும் இல்லை. ஆனால் ஹிந்துக்களின் வேதங்களில் பத்ரிநாதனைப் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது. இந்தக் கோவில் அலக்நந்தா நதியின் கரையில் நாராயண பர்வதத்தின் மடியில் அமைந்திருக்கிறது. இதற்குப் பக்கத்தில் "தப்த குண்டம்" எனப்படும் ஒரு வென்னீருற்று இருக்கிறது. இந்தக் கோவிலானது அசோகச் சக்கரவர்த்தி காலத்தில் பௌத்தர்களால் வழிபடப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஆனால் ஸ்கந்த புராணத்தின் படி பத்ரிநாதர் விக்ரஹமானது ஆதி சங்கரரால் நாரத குண்டத்திலே கண்டு பிடிக்கப்பட்டு மறுபடியும் 8-வது நூறறாண்டிலே மறுபடியும் ஸ்தாபிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. பத்ரிநாதரின் (விஷ்ணு) விக்ரஹமானது கருப்பு நிற சாளக்கிராமத்தில் பத்மாசனத்தில் வீற்றிருப்பது போல இருக்கிறது.

இந்த பத்ரிநாதரை வழிபடும் பக்தர்கள் இந்த இறைவனை பிரம்மாவின் வடிவிலே விஷ்ணுவின் வடிவிலே மகேசன் (சிவபெருமான்) வடிவிலே, ஹனுமான், காளி போன்ற வடிவிலே என்று எந்த உருவங்களில் அவர்கள் மனக்கண்ணால் பார்க்கிறார்களோ அந்த உருவிலே அவர்களுக்குக் காட்சியளிக்கிறதாகக் கூறப்படுகிறது. எல்லாம் நானே என்ற தத்துவத்தை விளக்குவது இது.

இந்தக் கோவிலை மூன்று பாகங்களாக பிரிக்கலாம். ஒன்று பத்ரிநாதர் குடிகொண்டுள்ள மூலஸ்தானம் கர்ப்பக்கிரஹம் பொன் தகடுகளால் வேயப்பட்ட மேல் கூரையோடு சேர்ந்தது. இரண்டாவது "தரிசன மண்டபம்" இங்கே தான் பூஜை மற்றும் இதர சடங்குகள் நடக்கின்றன. ஆனால் இந்த மண்டபம் மிகச் சிறியதாகையால் ஒரு சிலரே இந்த மண்டபத்தில் இருக்க முடியும். மூன்றாவது "சபா மண்டபம்" என்பது. இந்த சபா மண்டபத்தில் தான் காலையில் 6.30 மணி முதல் பகல் 1 மணி வரையிலும் மாலை 4 மணி முதல் இரவு 9 மணி வரையிலும் பக்தர்களுக்கு தரிசனம் கொடுக்கிறார். மங்கல மணியோசையுடன் கூடிய வேதகோஷம், கோவிலை சொர்க்கத்திற்கு இணையாக மாற்றுகிறது. பக்தர்கள் "தப்த குண்ட"த்தில் நீராடி பின் கோவில் பூஜைகளில் கலந்து கொள்ளலாம். காலையில் பூஜைகள் மஹாபிஷேகம், கீதாபாதம் பகவத்பாதம் என்றும் மாலைப் பூஜைகள் கீதகோவிந்தம், ஆரத்தி என்றும் சொல்லப் படுகின்றன.

ஆரத்தியின் போது பாடப்படும் புனிதப் பாட்டுகளின் சாரம்.

*சர்வசக்தி படைத்த உலகனைத்தும் காக்கும் இறைவா பத்ரி நாராயணா, புனித கங்கைக்கு அருகிலே உள்ள பனிபடர்ந்த கோவிலில் இருந்து கொண்டு காட்சி கொடுக்கிறீர். குளிர்ந்த காற்றடிக்கும்*

*இப்பிரதேசத்தின் மேல் அமர்ந்து கொண்டு பக்தர்களுக்கு திவ்ய தரிசனம் கொடுக்கிறீர். எம்பிரான் சிவபெருமானும் தவக் கோலத்தில் உம்மைப் பார்த்து கொண்டிருக்கிறார். உலகை சிருஷ்டிக்கும் பிரம்மன் வேதங்களோடு ஒலித்துக் கொண்டு உன் பெருமைபாடுகிறார்கள். உன்னைத் துதிபாடும் மற்ற தெய்வங்கள், சக்தி, கௌரிகணேஷ், ஷரத் தைத்தவிர நாரதமுனிவரும் ஆகும்.*

இவர்கள் எம்பெருமான் பத்ரிநாதரைப் புகழ்ந்து பாடிய வண்ணம் இருப்பார்கள். இந்த தெய்வங்கள் தவிர மழையின் தெய்வமான இந்திரன், தனத்தின் தெய்வமான குபேரன், சூரியன், சந்திரன் மகாமுனிவர்கள் தவஸ்ரேஷ்டர்கள் பத்திரிநாதனின் வெற்றி விஜயுத்தைப் பாடிக் கொண்டிருக்கிறார்கள்.

இவர்களைத் தவிர கவிகள், பாடகர்கள், நடனக் கலைஞர்கள், யக்ஷகர்கள் போன்றவர்களும் பத்ரிநாதரின் பெருமையைப் பாடிக் கொண்டிருக்கி றார்கள். கந்தர்வர்களும் கூட உன் பெருமையைப் பாடுகிறார்கள். பத்ரிநாராயணின் தலையில் விஷ்ணு பத்னியான லக்ஷமிகமலா வீற்றிருக்கிறாள்.

## *பஞ்ச பத்ரிகள் (ஐந்து பத்ரிகள்)*

பத்ரிநாதனை, விஷால்பத்ரி, யோகத்யான்பத்ரி, பவிஷ்யபத்ரி, ப்ரிதபத்ரி, ஆதிபத்ரி என்ற பெயர்களில் ஐந்து இடங்களில் தரிசிக்கின்றனர்.

*1. விஷால் பத்ரி* : பத்ரிநாதருடைய பிரதான ஸ்தலமான இது "பத்ரிவிஷால்" எனப்படும்.

இங்கு பூஜையின் போது பக்தர்கள் "ஜெய் பத்ரி விஷால் கி" என்று கோஷமிடுவார்கள்.

*2. யோகத்யான் பத்ரி* : புராதனகாலத்தில் பாண்டு மஹாராஜா, பாண்டுகேஷ்வரைக் குறித்து இங்கு தியானம் செய்தார். அது முதல் இந்த இடம் "யோகத்யான் பத்ரி" என்றழைக்கப்படுகிறது. இது பத்ரிநாத்திலிருந்து 24 கி.மீட்டரிலும் ஜோஷிமத்திலிருந்து 20 கி.மீட்டரிலும் உள்ளது.

*3. பவிஷ்ய பத்ரி* : 2744 மீட்டர் உயரத்திலும் ஜோஷிமத்திலிருந்து 17 கி.மீ தொலைவிலும் உள்ள பவிஷ்ய பத்ரி. ஒரு சிறிய ஊராகும்.

*4. ப்ரித பத்ரி* : ஜோஷிமட்டிலிருந்து 17 கி.மீ தூரத்தில் உள்ள ப்ரித பத்ரியில் "அனிமத்" என்ற இடத்தில் வீற்றிருக்கும் பத்ரிநாதனை ஆதி குரு சங்கராச்சார்யார் வழிபட்டு வந்திருக்கிறார். இது "பிப்பல் கோட்" போகும் வழியில் உள்ளது.

*5. ஆதிபத்ரி* : குப்தர்கள் கால கோவில்கள் பல ஆதிபத்ரியில் தென்படுகின்றன ஆனால் அவைகளுள் பிரசித்த மான நாராயணன் கோவில் தான் மக்களை ஈர்க்கிறது. இங்கு உள்ள நாராயணனின் உருவம் கருங்கல்லில் அமைந்துள்ளது. ஆதிபத்ரி கர்ண பிரயாகையிலிருந்து 16 கி.மீ தூரத்தில் "ராணி தேத்" பாதையில் அமைந்துள்ளது. உண்மையான பக்தி சிரத்தையோடு மனமாரச் செல்லும் இந்த யாத்திரிகளுக்கு நிச்சயம் முக்தி கிட்டும் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. ஆனால் மனத்திடமும் உறுதியும் நம்பிக்கையும் இருந்தால் நிச்சயம் எல்லாப்பாவங்களும் அகலும்.

அந்த நம்பிக்கையும் இன்பமும் யாத்திரை முடிந்த பின் தான் கிடைக்கும் என்று உணர வேண்டும்.

ஹரித்வாரிலிருந்து பத்திரிநாத் செல்லும் பேருந்து பாதையில் உள்ள ஊர்களும் அவ்வூர்களுக்கு இடையே உள்ள தூரமும்:-

| | தூரம் | உயரம் |
|---|---|---|
| ஹரித்வார் to ரிஷிகேசம் | 24 கி.மீ | 340மீ |
| ரிஷிகேசம் to தேவப்பிரயாகை | 70 " | 472 " |
| தேவப்பிரயாகை to ஸ்ரீநகர் | 35 " | 579 " |
| ஸ்ரீநகர் to ருத்ரபிரயாகை | 34 " | 610 " |
| ருத்ரபிரயாகை to கோல்டிர் (Gholtir) | 10 " | 645 " |
| கோல்டிர் to கௌச்சார் (Gauchar) | 10 " | 790 " |
| கௌச்சார் to கர்ணபிரயாகை | 11 " | 795 " |
| கர்ணபிரயாகை to நந்தப்பிர்யாகை | 22 " | 914 " |
| நந்தப்பிரயாகைtoசமோலி(Chamoli) | 10 " | 1069 " |
| சமோலி to பிராகி (Birahi) | 8 " | 1100 " |
| பிராகி to பிப்பல் கோட்டி | 9 " | 1311 " |
| பிப்பல் கோட்டி to கருட்.கங்கா | 5 " | 1372 " |
| கருட்கங்கா to தங்கானி (Tangani) | 6 " | 1677 " |
| தங்கானி to ஹெலாங் | 6 " | 1524 " |
| ஹெலாங் to ஜோஜிமட் | 14 " | 1850 " |
| ஜோஷிமட் to விஷ்ணுப்ரயாகை | 10 " | 1372 " |

| | | |
|---|---|---|
| விஷ்ணுப்பிரயாகைtoகோவிந்தகாட் | 10 " | 1829 " |
| கோவிந்தகாட் to பாண்டுகேஷ்வர் | 4 " | 1829 " |
| பாண்டுகேஷ்வர் to ஹனும்மாஞ்சட்டி | 9 " | 2286 " |
| ஹனுமாஞ்சட்டி to தேவ்தர்ஷனி | 13 " | 3101 " |
| தேவ்தர்ஷனி to பத்ரிநாத் | 2 " | 3110 " |
| | 322 கி.மீ | |

| | |
|---|---|
| கேதார்நாத் to பத்ரிநாத் உக்கிமத்வழியாக | 230 கி.மீ |
| நைனிடால் to புத்ரிநாத் ராணிகேத் வழியாக | 340 கி.மீ |
| நைனிடால் to பத்ரிநாத் அல்மோரா வழியாக | 346 கி.மீ |
| கோட்வாரா to பத்ரிநாத் ருத்ரபிரயாகை வழியாக | 330 கி.மீ |
| ரிஷிகேஷ் to பத்ரிநாத் | 298 கி.மீ |
| கேதார்நாத் to புத்ரிநாத் ருத்ரபிரயாகை வழியாக | 243 கி.மீ |
| முசௌரி (Mussourie) to புத்ரிநாத் ஸ்ரீநகர், ருத்ரபிராயாகை வழியாக | 329 கி.மீ |

*தேவப்பிரயாகை* :- இது அலகநந்தாவும் பாகீரதி நதியும் சேர்ந்து கங்கையான இடத்தில் உள்ளது. ரிஷிகேசத்திலிருந்து 70-வது கி.மீ தூரத்தில் அமைந்திருக்கும் இந்த ஊர் ஒரு முக்கியமான நகரம் ஆகும்.

*ஸ்ரீநகர்* :- தெஹ்ரிகார்வாலின் தலைநகராக விளங்கிய இந்த ஊரில் தான் மிகவும் குளிர்ந்த அலக்நந்தா ஓடுகிறது. கமலேஷ்வர் மகாதேவரின் கோவில் இந்த ஊரில் ஒரு பழமையான கோவிலா

கும். பல கல்லூரிகளும் பல்கலைக் கழகமும் முக்கிய மான சர்க்கார் அலுவலகங்களும் உள்ள வளர்ந்து வரும் நகரம் ஸ்ரீநகர். தேவப்பிரயாகையிலிருந்து 35 கி.மீ தூரத்தில் உள்ள ஸ்ரீநகரிலிருந்துதான் பௌரீ, கோட்துவாரா என்ற இடங்களுக்குப் பாதைகள் பிரிந்து செல்கின்றன.

*ருத்ரபிரயாகை* : ஸ்ரீநகரிலிருந்து 34 கி.மீ தொலைவில் உள்ள ஒரு முக்கியமான ஊர்தான் ருத்ரபிரயாகை பத்திரிநாத்திற்குச் செல்வதற்கு ருத்ர பிரயாகை வழியாக ஒன்றும் உக்கிமத் வழியாக மற்றொரு பாதையும் உள்ளன. இந்த இடத்தில் தான் அலக்நந்தாவும் மந்தாகினியும் கூடுகின்றன. நாரத மாமுனிவர் இங்கு தான் பல வருடங்கள் தவமிருந்ததாகக் கூறப்படுகிறது. இங்கு ருத்ர்நாத்ஜி மந்திரும் ஜகதாம்பாதேவி மந்திரும் உள்ளன.

*கோல்டிர்* (Gholtir) :- பத்ரிநாத்திலிருந்து 149 கி.மீ ருத்ரபிரயாகையிலிருந்து 10 கி.மீ உள்ள இந்தச் சிறிய ஊர், கோல்டிர், சமோலி ஜில்லாவின் எல்லை யில் உள்ளது.

*கௌச்சார்* (Gauchar) :- இந்த ஊரானது கோல்டிரிலிருந்து 10 கி.மீ தூரத்தில் உள்ள பெரிய வியாபார ஸ்தலம். இவ்வூரில் நடக்கும் சந்தைக்கு ஆயிரக்கணக்கானவர்கள் ஒவ்வொரு வருடமும் வந்து செல்கிறார்கள்.

*கர்ணபிரயாகை* :- மகாபாரதத்தில் வரும்

கர்ணனின் பெயர் சம்பந்தப்பட்ட கர்ணபிரயாகையில் உமாதேவியின் கோவில் அலக்நந்தாவின் முகப்பிலே அமைந்துள்ளது. விடுமுறையை அமைதியாக கழிப்பதற்கு ஏற்ற இந்த இடம் கௌச்சாரிலிருந்து 11 கி.மீ தொலைவில் உள்ளது. பிண்டார் நதியின் கரையிலே பிரயாணிகள் தங்கும் லாட்ஜூம் உள்ளது. இங்கு தபால் தந்தி அலுவலகங்கள், பாரத ஸ்டேட் வங்கி, அரசு கல்லூரி மற்றும் சப்டிவிஷன் அலுவலகம் முதலியவை உள்ளன. ராணிகேத்திலிருந்தும் கௌசானிலிருந்தும் வரும் பாதைகள் இங்கு கூடுகின்றன.

*நந்தபிரயாகை* : காட், ரம்ணி என்ற இடங்களுக்குச் செல்லும் பாதையானது நந்தப்பிரயாகையில் இருக்கிறது. காட் இது கர்ணபிரயாகையிலிருந்து 22 கி.மீ தூரத்தில் உள்ளது. இந்த ஊரானது அலக்நந்தா, நந்தாகினி நதிகள் கூடும் இடத்தைச் சுற்றி உள்ள இடத்தில் உள்ளது;. நந்ததேவி சிகரத்திலிருந்து உற்பத்தியாகும் நதி நந்தாகினியாகும்.

*சமோலி* (Chamoli) : இந்த சிறிய டவுனானது அலக்நந்தா வின் கரையில் நந்தப்பிரயாகையிலிருந்து 10 கி.மீ தூரத்தில் உள்ளது. பத்ரிநாத்திலிருந்து 96 கி.மீயும் கேதார்நாத்திலிருந்து 147 கி.மீ உள்ளது சமோலி. இங்கிருந்து 10.கி.மீ தூரத்தில் உள்ள கோப்பேஷ்வரீல் (Gopeshwar) ஒரு பெட்ரோல் பங்க் உள்ளது. ஆனால் இரவு வேளையில் தங்குவதற்கு ஏற்ற இடம் எதுவும் இங்கு இல்லை.

*பிராஹி* (Birahi) : - அலக்நந்தா, பிராஹி கங்கா கரையில் உள்ள இந்த பிராஹி. சமோலி யிலிருந்து 10.கி.மீட்டரில் உள்ளது

*பிப்பல்கோட்டி* (Pipal Koti) :- பச்சைபசுமை நிறைந்த மலையின் மடியிலும் அழகான சமவெளி போன்ற வயல்களின் நடுவிலும் அமைந்துள்ள அழகான ஊர் பிப்பல்கோட்டி. இரவில் தங்குவதற்கு வசதியான தர்மசாலாக்கள் இங்கு இருக்கின்றன.

*கருட்கங்கா* : பத்ரிநாராயணர், கருட வாகனத்தில் பத்ரிவனத்திற்குச் செல்லும் போது வழியில் கருடனை விட்டுச் சென்ற இடம் தான் "கருட்கங்கா". இவ்விடத்திலிருந்து சில இமாலய பனிச் சிகரங்களைக் காணலாம். கருட்கங்கா நதிக் கரையில் அமைந்துள்ள இந்த இடம், 'பிப்பல் கோட்டியிலிருந்து 5 கி.மீ தூரம்.

*தங்கானி* (Tangani) :- இது கேதாரியிலிருந்து 175 கி.மீட்டரும் கருட்கங்காவிலிருந்து 6 கி.மீட்டரும் தொலைவு ஆகும். இவ்வூரில் நாரினால் செய்யப் பட்ட விலை மலிந்த, கண்களைக் கவரக்கூடிய, நல்ல கூடைகள் கிடைக்கின்றன.

*ஹெலாங்* (Helang) :- இந்த சிறு கிராமம் ஜோஷிமட்டிற்குப் போகும் வழியிலும் தங்கானி யிலிருந்து 6 கி.மீட்டரிலும் உள்ளது. இங்கிருந்து 9 கி.மீட்டர் தொலைவில் தான் பஞ்சகேதார்களில் ஒன்றான கல்பேஷ்வர்மகாதேவர் கோவில் உள்ளது.

*ஜோஷிமட்* :- (ஆதிசங்கரர் அமர்ந்திருந்த இடம்) பத்ரிநாத் போகும் பாதையில் ஹெலாங்கி லிருந்து 14 கி.மீ தொலைவில் அமைந்திருக்கும் இந்த ஜோஷிமட். ஒரு முக்கிய ஸ்தலம் ஆதி சங்கரர் நிறுவிய மடங்களில் ஒன்றான இந்த ஜோஷி மடத்திற்கு ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் வந்து வழிபடுகிறார்கள். 2400 ஆண்டு வயதான கல்பவிருக்ஷம் இன்றும் இங்கு உள்ளது. நரசிம்மர், துர்காகோவில்கள் மிகவும் பிரசித்தி பெற்றவை. தபால் தந்தி அலுவலகங்களும், வங்கியும், தங்கு வதற்கு வசதியான இடங்களும் இங்கே உள்ளன. பவிஷ்யபத்ரி இங்கிருந்து 11 கி.மீட்டர் தூரத்தில் உள்ள தபோவன் என்ற பள்ளத்தாக்கில் உள்ளது. பத்ரிநாத்தில் குளிர்காலங்களில் கோவிலை மூடுவதால் ஜோஷிமட்டில் உள்ள நரசிம்மர் கோவிலில் பத்ரிநாராயணை வழிபடுகிறார்கள். குளிர் காலங்களில் பத்ரிநாதர் ஜோஷி மட்டிலிருந்து சில கி.மீட்டர் தூரத்தில் உள்ள மிகவும் எழில் நிறைந்த இடங்கள் ஔலி (Auli), கோர்சோன் (Gorson). இங்கிருந்து நந்ததேவி, நீலகண்ட சிகரங்கள் மிகவும் அழகாகத் தென்படுகின்றன.

*விஷ்ணுபிரயாகை* :- இந்த இடத்திலிருந்து கேதார்நாத் 205 கி.மீட்டரும், ஜோஷிமட்டிலிருந்து 10 கி.மீட்டரும் ஆகும். இந்த விஷ்ணு பிரயாகையில் தான் நடனமாடும் நளின அலக்நந்தாவும் தௌலிகங்காவும் (Dhauli Ganga) ஒன்று சேருகின்றன.

தௌலிகங்காவானது நிதி பள்ளத்தாக்கிலிருந்து (Niti Valley) உற்பத்தியாகி வருகிறது.

*கோவிந்தகாட்* (Govind Ghat) :-விஷ்ணுப் பிரயாகையிலிருந்து 10 கி.மீ தூரத்தில் உள்ள இந்த சிறிய இடம் கோவிந்தகாட், இங்கிருந்து தான் 15 கி.மீட்டருக்கு நெளிந்து வளைந்து செல்லும் பாலமானது கோவிந்த் அணைக்குச் செல்கிறது. இங்கிருந்து மலையேறுபவர்களுக்கு ஹேமகுண்ட் மற்றும் மலர்ப் பள்ளத்தாக்குச் (Valley of flowers) செல்லும் பாதை ஆரம்பமாகிறது.

*பாண்டுகேஷ்வர்* : பத்ரிநாத்திலிருந்து 24 கி.மீட்டரும் கேதார்நாத்திற்கு 219 கி.மீட்டர் தொலைவும் உள்ள இடம் பாண்டுகேஷ்வர். இங்கு யோகத்தியானத்தில் உள்ள பத்ரி தென்படுவதாகக் கூறப்படுகிறது. பாண்டு மகாராஜா கடைசி சிலகாலங்கள் இங்கு வாழ்ந்ததாகச் சொல்லப்படுகிறது.

*ஹனுமாஞ்சட்டி* (Hanuman chatti) : பாண்டு கேஷ்வரிலிருந்து 9கி.மீட்டரில் உள்ளது. ஹனுமாஞ் சட்டி, ஸ்ரீ ஹனுமான், இங்கு நிஷ்டையில் அமர்ந்து பத்ரிநாதரைப் பிரீதி செய்தார். இங்கு ஹனுமானுக்கு ஒரு சிறிய கோவில் உள்ளது. இந்த இடத்தில் பாண்டவர்கள் ஹனுமானுக்கு பூஜை செய்ததாகவும் ஹனுமான் அவர்களுக்குக் காட்சி கொடுத்ததாகவும் கூறப்படுகிறது. ஆகவே தான் இந்த இடத்திற்கு ஹனுமாஞ்சட்டி என்ற பெயர்.

தேவ்தர்ஷன் (Dev Darshan) : - பத்ரிவனப் பள்ளத்தாக்கு இங்கிருந்து ஆரம்பித்துச் செல்கிறது. பத்ரியின் கோவிலை இங்கிருந்து பார்க்க முடியும். இந்த இடம் பத்ரிநாத்திலிருந்து 2 கி.மீ: கேதார்நாத்தி லிருந்து 241 கி.மீ., ஹனுமாஞ்சட்டியிலிருந்து 13 கி.மீ. இங்கிருந்து பார்த்தால் அகண்ட திறந்தவெளிப் பள்ளத்தாக்கில் பத்ரிநாத் தெரியும்.

தப்தகுண்டமும் நாரதகுண்டமும் :- கருட ஷீலாவிலிருந்து உற்பத்தியாகும் வென்னீர் ஊற்று ஒரு குளத்தில் போய் விழுகிறது. பத்ரிநாத்திற்குச் செல்லும் முன்பு தப்தகுண்டத்திலும் நாரதகுண்டத் திலும் நீராடி விட்டுத்தான் பத்ரிநாதனைத் தரிசிப் பார்கள். தப்த குண்டத்தைச் சுற்றிலும் அமைந்துள்ள நாரத ஷிலா, நரசிங்க ஷிலா, கருட ஷிலா, மற்றும் மார்க்கண்ட ஷிலாவும் புராணங்களில் பேசப்படு கின்ற முக்கிய ஸ்தலங்கள்.

பஞ்ச தாராக்கள் எனப்படும். பிரஹலாத தாரா, கூர்ம தாரா, ஊர்வசி தாரா, பிருகு தாரா, மற்றும் இந்திர தாரா பிரபலமான பத்ரிநாத்பூரியில் உள்ள நீரூற்று ஓடைகள் மதச் சடங்குகள் மற்றும் சிரார்த்தங் களையும் செய்யும் ஹிந்துக்களுக்கு அலக்நந்தாக் கரையில் உள்ள பிரம்ம கபாலம் ஒரு முக்கிய இடமாகும்.

அலக்நந்தாவின் எதிரே உள்ள நரபர்வதத்தில் உள்ள இரண்டு ஏரிகளில், ஒற்றைக் கண்ணுடைய சேஷநாகம் ஒரு கல்பாறையில் உள்ளது. இந்த

நாகத்தின் கண் வடிவமைப்பு இயற்கையாகவே உள்ளது.

*பாம்னி* (Bamni) : கிராமத்தின் அருகே, ஊர்வசிக்காக அமைந்த ஒரு கோவில் உள்ளது. விஷ்ணு பகவானின் கால் வடிவில் அமைந்த ஒரு கற்பாறை தான் சரணபாதுகா. அதாவது மகாவிஷ்ணு வின் பாதுகை என்று சொல்லப்படுகிறது. இங்கிருந்து பத்ரிநாத் 2 கி.மீ உள்ளது. இங்கு சவாரிக்கு நிறைய மட்டக் குதிரைகள் கிடைக்கின்றன.

*மானா* : இந்த மான்னா கிராமத்திற்கு எதிரில் அலக்நந்தாவின் பள்ளத்தாக்கில் தான் மாதாமூர்த்தி இருக்கிறது. மானாவிலிருந்து பத்ரிநாத்பூரி 3 கி.மீ தொலைவில் உள்ளது. இந்த மானா கிராமத்தில் வியாஸ்குகை, கணேஷ்குகை, பீம குகை மற்றும் மச்கண்ட் குகை என்று நிறைய குகைகள் உள்ளன.

*கேசவ பிரயாகையும் வசுதர்ராவும்* : மானாவிற்கு வடக்கே 3 கி.மீ தூரத்திலிருந்து சரஸ்வதி பிரவேசிக்கிறது. அலக்நந்தாவும் சரஸ்வதி யும் கூடுமிடம் கேசவப் பிரயாகை என்ற அழைக்கப் படுகிறது.

122 மீட்டர் உயரத்திலிருந்து விழும் வசுதாரா நீர்வீழ்ச்சி, மானாவிலிருந்து 3 கி.மீ துரமும் பத்ரிநாத் புரியிலிருந்து, 8 கி.மீ தூரத்திலும் உள்ளது. இங்கிருந்து அலகாபுரி பளிங்குப் பாறைகளைப் பார்க்கலாம். வசுதாரா நீர்வீழ்ச்சியிலிருந்து 4 கி.மீட்டரும், பத்ரி நாத்புரியிலிருந்து 12 கி.மீட்டரும் உள்ள இடம் லக்ஷ்மிவனம். இங்கு லக்ஷ்மிதேவி தவம் செய்ததாக

ஜதீகம். போஜ்பத்ர மரங்கள் இங்கு நிறைய உள்ளன. லக்ஷ்மிவனத்திலிருந்து 9 கி.மீ தூரத்திலும் பத்ரிநாத் பூரியிலிருந்து 21 கி.மீ தூரத்திலும் உள்ள நர நாரா யண மலைத்தொடர்ச்சி, சுக்ர தீர்த்தத்தில் கூடுகிறது.

சடோபநாத் ஏரியும் அலாகாபூரியும் (Satopannath Lake and Alakapuri) :- 4402 மீட்டர் உயரத்தில் அமைந்தி ருக்கும் சடோபநாத் ஏரியானது பத்ரிநாத்திலிருந்து 25 கி.மீ தொலைவிலும் சக்கதீர்த்திலிருந்து 4 கி.மீ தூரத்திலும் உள்ளது. வானிலை .எப்போதும் ஒரே சீராக இல்லாத காரணத் தால் வசுதாரா நீர் வீழ்ச்சியிலிருந்து சடோபநாத் போகும் பாதை எதிர்பாராத வண்ணமிருக்கும். ஸ்வர்கரோஹன் (Swargarohan) . மலையானது முழுவதும் ஒரே பனி •படர்ந்தமலையாகும். சோன்குண்ட் (Son kund) விஷ்ணுகுண்ட் (Vishnu kund) சூரிய குண்ட் (Surya kund) ஆகியவை சிறிய நீர் குட்டைகள். சமுத்திரமட்டத்திலிருந்து 6057 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ள பால்கன் சிகரத்தின் (Balkun peak) அடிவாரத்தில் அமைந்துள்ள அலகாபுரி பளிங்குபாறைகள் லக்ஷ்மி வனத்திலிருந்து 3 கி.மீ ரையும், பத்ரிநாத்புரியிலிருந்து 15 கி.மீ தூரத்திலும் உள்ளவை.

அலாகாபுரி மற்றும் கௌமுக் பளிங்குப்பாறை மண்டலங்களைப் பிரிப்பது நாராயணபர்வதம். பத்ரி நாதரின் கால்களைத் தொட்டு விட்டுத் தொடரும் அலகானந்தா நதி தேவப் பிரயாகைக்குச் செல்கிறது. இங்கிருந்து நீல்கண்ட சிகரத்தைப் பார்க்கலாம்.

# பாகம் IV

## கேதார் நாத்

### சிவபெருமான் உரையும் இடம் :

சிவபெருமான் உரையும் இந்த கேதார்நாத் கடல் மட்டத்திலிருந்து 3583 மீட்டர் உயரத்தில் ஹிமய மலைச்சாரலில் அமைந்திருக்கிறது. மேலே இமய மலையிலிருந்து கீழே பூக்களால் அலங்கரிக்கப்பட்ட மந்தாகினி (Mandakini Valley) பள்ளத்தாக்கு வரை பனி படர்ந்திருக்கிறது. இவ்விடத்தில் தான் சிவபெருமானுடைய லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. மஹாபாரதப் போர் முடிந்து பர்ண்டவர்களால் தங்கள் பாவங்களிலிருந்து விடு படும் நேர்க்கத்தோடு கட்டப்பட்ட இந்தக் கோவில் தான் கேதார்நாத் என்று அழைக்கப்படுகிறது.

மலையின் மேலே கேதார்நாத்தின் தென்பாகத்தில் பைரவருக்கான கோவில் காணப்படுகிறது. கேதார்நாத் கோவிலில் உள்ள சுவர்களில் செதுக்கப்பட்ட அழகிய சிற்பங்களை யாத்ரிகர்கள் கண்டுகளித்திருக்கிறார்கள்.

ஒரு மண்டபமும், கர்ப்பக்கிரஹம் இதில் இருக்கின்றன. கர்ப்பக்கிரஹத்தின் மத்தியிலே உள்ள ஒரு பாறை சிவபெருமான் என்று வழிபடப்படு கிறது. மண்டபத்தில் ஒரு பெரிய நந்தியும் உள்ளது. பிரதக்ஷிண பாதை சிவபெருமானாக பூஜிக்கப்படு

கிறது. இதற்கு வெளியே பல சிலைகளும் சிறு கோவில்களும் உள்ளன. சிவபெருமானின் 12 ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்று இங்குள்ள சிவ பிண்டா. இங்கு காலையில் நிகழும் பூஜை நிர்வாண தரிசனம் மாலையில் உள்ள பூஜை சிங்கார தரிசனம் ஆகும். இது தவிர காலை பூஜைகளாவன:-

சுப்ரபாதம், பால்போக் (Balbhog) மகாஅபிஷேகம் (Mahaabishakam) ருத்ராபிஷேகம் (Rudrabisham) அஷோடார் (Ashotar) மற்றும் சிவபூஜை மாலையில் சிவ · அஷ்டோத்திரம் சிவ சகஸ்ரநாமம், சிவநாமாவளி, சிவமஹிமை ஸ்தோத்திரங்கள் மற்றும் ஏகாந்த சேவையும் ஆகும்.

கோவிலின் கதவுகள் எப்போதும் ஏப்ரல் கடைசி வாரத்தில் திறக்கப்பட்டு தீபாவளி பூஜைகள் முடிந்ததும் மூடப்படுகின்றன. தீபாவளிக்குப் பின்னால் வரும் மாதங்கள் மிகவும் குளிரும் பனிபடரும் மாதங்களும் ஆகும். சிவனுக்குப் பூஜைகள் செய்யும் சில பண்டாக்கள் சம்ஸ்கிருத பண்டிதர்கள். அவர்கள் குப்த காசி, உக்கிமத் இவைகளைச் சுற்றியுள்ள கிராமங்களில் வசிக்கிறார்கள். கேதாரைச்சுற்றிலும் ஹம்ஸ குண்ட், உதக்குண்ட் ரேட்குண்ட் என்ற குண்டங்கள் மிகவும் சாஸ்திரப் பிரசித்தமானவை.

இந்த அழகிய பளிச்சிடும் கேதார் அருகில் $^{3}/_{4}$ கி.மீ தொலைவில் காந்தி சரோவர் என்ற ஏரியும் 5 கி.மீ தொலைவில் வாசுகி ஏரியும் $1^{1}/_{2}$ கி.மீ தூரத்தில்

பைரவ நாத் கோவிலும் உள்ளன. ஆதிசங்கரரின் சமாதியும் இங்கிருந்து காணப்படுகிறது.

பாபம் செய்தவர்களை புண்ணியவான்களாகவும், ஏற்கனவே புண்ணியம் செய்தவர்களை மேலும் புண்ணிய சீலர்களாகவும் மாற்றும் இந்த அழகிய இடத்தை ஆதி குரு ஸ்ரீ சங்கராச்சாரியார் சிவபிரானுடன் உறைய தேர்ந்தெடுத்ததில் வியப் பொன்றுமில்லை. வெண்பனித்திரையுடன் மலை களுக்கிடையே அமைந்துள்ள இந்த கேதார்நாத் கருட்சட்டியிலிருந்து ½ கி.மீ தூரத்திலிருந்தே தென்படும். கேதார்நாத் கோவில் கட்டிடக் கலையிலும் அழகிலும் மிஞ்சியிருந்த போதிலும், இதற்கான சரித்திரபூர்வமான ஆதாரங்கள் ஏதுமில்லை.

## பஞ்ச (ஐந்து) கேதார்

பஞ்சகேதார் எனப்படும் கேதார்நாத், துங்கநாத், ருத்ரநாத், மத்மஹேஷ்வர் மற்றும் கபிலேஷ்வர் என்ற இடங்களில் சிவபெருமானுடைய உடல், புஜங்கள், முகம், தொப்புள் மற்றும் தலைமுடியும் முறையே தோன்றின.

**கேதார்நாத்** : பாண்டவர்களில் கண்களிலிருந்து மறைந்து வாரணாசியிலிருந்து இங்கு ஒரு நந்தி உருவிலே வந்து பாண்டவர்கள் இங்கு வந்த போது அவர்களுக்கு தரிசனம் கொடுத்ததாக வரலாறு.

*துங்கநாத்* : 3680 மீட்டர் உயரத்தில் இந்த இடத்தில் கோவிலிலிருந்து யாத்திரிகர்கள் பஞ்ச சூலி, நந்ததேவி, தூனர்கிரி, நீலகண்ட உச்சி, கேதார் நாத் மற்றும் பண்டார் பூஞ்ச் என்ற இடங்களைக் காண முடியும் இந்த துங்கநாத் உக்கிமத்திலிருந்து 30 கி.மீ தொலைவிலும் சோப்டாவிலிருந்து 5 கி.மீ தொலைவிலும் உள்ளது.

*ருத்ரநாத்* : கோபேஷ்வரிலிருந்து 20 கி.மீ தொலைவில், வைதாரிணி நதி பாயும் இந்த இடத்தில் சிவபெருமான் நீலகண்டன் என்று பூஜிக்கப்படுகிறார்.

*மத்கேஷ்வர்* : குப்தகாசியிலிருந்து 30 கி.மீ தூரத்தில் உயரமான இடத்தில் சிவன் கோவில் உள்ளது. கேதாரில் மறைந்த தொப்புள் இந்த இடத்தில் தான் திரும்ப சேர்ந்ததாகக் கூறப்படுகிறது.

*கல்பேஷ்வர்* : இது ஒரு குகைக்கோவில் ஆகும். ஜோஷிமத்திலிருந்து 14 கி.மீ அலக்நந்தா வைக் கடக்கும் இடத்திலிருந்து 9 கி.மீ உள்ள ஹெலாங்கில் உள்ளது இந்த ருத்ரநாதர் கோவில்.

*ஸ்ரீ பத்ரிநாத்திலிருந்து கேதார்நாத்திற்கு:* பத்ரிநாத்திலிருந்து கேதார்நாத் செல்ல குண்ட் என்ற இடத்திற்கு வரவேண்டும். இங்கிருந்து கேதார்நாத் திற்கு இரண்டு பாதைகள் உள்ளன.

முதல்பாதை - ருத்ரபிரயாகை வழி 243 கி:மீ,
இரண்டாவது பாதை - உக்கிமத் வழி 230 கி.மீ

# ஹரித்வாரிலிருந்து கேதார்நாத் வழிகள்

| | கி.மீ | உயரம்மீ |
|---|---|---|
| ஹரித்வார் - ரிஷிகேஷ் | 24 | 340 |
| ரிஷிகேஷ் - தேவபிரயாகை | 70 | 472 |
| தேவபிரயாகை - ஸ்ரீநகர் | 35 | 579 |
| ஸ்ரீநகர் - ருத்ரபிரயாகை | 34 | 610 |
| ருத்ரபிரயாகை - தில்வாரா | 9 | 671 |
| தில்வாரா - அகஸ்த்முனி | 10 | 772 |
| அகஸ்த்முனி - குண்ட்சட்டி | 15 | 976 |
| குண்ட்சட்டி - குப்த்காசி | 5 | 1979 |
| குப்தகாசி - நளா (நாராயண்கோடி) | 3 | |
| நளா - ஃபடா | 11 | 1601 |
| ஃபடா (Phata) - ராம்பூர் | 9 | 1946 |
| ராம்பூர் - சோன்பிரயாகை | 5 | 1829 |
| கௌரிகுண்ட் (By bus) | | 235 |
| கௌரிகுண்ட்த்திலிருந்து நடந்து சென்றால் - ரம்பாரா | 7 | 2591 |
| ரம்பாரா - கருட்ச்சட்டி (நடந்து) | 4 | 3262 |
| கருட்ச்சட்டி - கேதார் (நடந்து) | 3 | 3583 |
| | 249 | கி.மீ |

ரிஷகேசிலிருந்து கேதார் செல்லும் பாதை (Road) 30கி.மீ தூரம் கங்கைகரை மேலேயே செல்கிறது. அப்படி பியாசி என்ற இடம் வரை சென்று அங்கிருந்து சக்னிதார் என்ற இடத்திற்கு மேலே உயரமாகச் செல்கிறது. சமுத்திர மட்டத்திலிருந்து சக்னிதார் 1100 மீட்டர் உயரத்திலும் கங்கைக் கரை இறக்கத்திலும் பிறகு பாதையானது தேவப்பிரயாகை வரை செல்கிறது.

மே, ஜுன், செப்டம்பர், அக்டோபர் மாதங்கள் கேதார்நாத் பயணத்திற்கு மிகவும் உகந்த மாதங்கள் நவம்பரிலிருந்து, ஏப்ரல் வரை முழுவதுமாக பனி படர்கிறது. மே முதல் நவம்பர் குளிரும் மிதமான குளிருமாக இருக்கும் ஜுலை முதல் செப்டம்பர் வரை மழைக்காலம்.

*ரிஷிகேசத்திலிருந்து தேவப்பிரயாகை 70 கி.மீ*

தேவப்பிரயாகை (புனித கங்கை நதியின் உற்பத்தி ஸ்தானம்) தேவப்பிரயாகை உத்தரகண்டத்தில் மிகவும் ஒரு முக்கியமான இடமாகும். சடோபந்தி விருந்து அலக்நந்தாவும், கௌமுகியிலிருந்து பாகீரதியும் இந்த இடத்தில் ஒன்று சேர்ந்து கங்கையா கிறது. யாத்ரீகர்கள் இந்த சங்கமத்தில் ஸ்நானம் செய்வதற்கு மிகவும் பிரியப்படுவார்கள். இந்த இடத்தில் தான் ஸ்ரீ ரகுநாத் கோவில் இருக்கிறது. தேவப்பிரயாகையில் பிண்டஸ்ரார்த்தம் செய்வது ஹிந்துக்களுக்கு விசேஷம். அலக்நந்தா கரையோர மாக உள்ள பாதையில் பகவான், மலேதா, கீர்த்திநகர்

வழியாகச் சென்று 35 கி.மீ தொலைவில் உள்ள ஸ்ரீநகரை அடையலாம். கங்கையின் வலது கரையில் உள்ள பாதை மோட்டார், கார்கள் போன்ற வாகனங் கள் செல்லவும், இடதுபுறம் உள்ள பாதை பாதசாரி கள் செல்லவும் ஏற்றவை. ரிஷிகேஷ், குலார்ச்சட்டி, சேமல்ச்சட்டி, பியாஸ்காட் மற்றும் உம்ராசு என்ற இடங்களின் வழியாக ஹரித்வாரிலிருந்து தேவப் பிரயாகை 94 கி.மீ தூரம்.

ஸ்ரீநகர் ரிஷிகேஷிலிருந்து 105 கி.மீட்டரிலும், கேதாரிலிருந்து 118 கி:மீட்டரிலும், தேஹ்ரியிலிருந்து 60 கி.மீட்டர் தூரத்திலும் உள்ளது ஸ்ரீநகர். மகாராஜா அஜய்பால் என்பவரால் நிர்மாணிக்கப்பட்ட இந்த நகரம் தேஹ்ரி கார்வாலின் தலைநகராக 1803 வரை இருந்தது. அலக்நந்தாவின் கரையில் தான் கமலேஷ்வர் மகாதேவ் குடி கொண்டிருக்கும் சிவன் ஆலயம் அமைந்திருக்கிறது. அலக்நந்தா விலிருந்து 29 கி.மீ தூரத்தில் உள்ள பௌரி (Pauri) யும் 137 கி.மீ தூரத்தில் கோட்வாராவும் (Kotdwara) உள்ளது.

*ருத்ரபிரயாகை* : கேதார்நாத், மத்மஹேஷ்வர் மஹாதேவ் மற்றும் காளிமத் என்ற இடங்களுக்குச் செல்லும் யாத்ரிகர் களுக்கு இந்த ருத்ரபிரயாகையே, சாமான்கள் வாங்கக்கூடிய சிறிய ஆனால் முக்கிய மான இடம். இது பாவ்ரி, தேஹ்ரி, மற்றும் சம்பா மாநிலங்கள் கூடுமிடத்தில் உள்ளது.

*தில்வாரா* : தேஹ்ரியிலிருந்து வரும் பாதை ரிஷிகேசத்திலிருந்து கேதார்நாத் செல்லும் பாதையை

சந்திக்குமிடத்தில் உள்ள இந்த தில்வாரா ருத்திரபிரயாகையிலிருந்து 9 கி.மீ தூரத்தில் உள்ளது. ஒரு மலைக்குகை வழியாக கேதார்நாத் செல்லும் பாதை, ரீங்காரத்துடன் செல்லும் மந்தாகினி (Mandakini) நதியின் கரையோரமாகவே செல்கிறது.

*அகஸ்திய முனி* :- தில்வாராவிலிருந்து 10 கி.மீ தூரத்தில் உள்ள இந்த இடத்தில் அகஸ்திய மகாமுனிவர் தவமிருந்ததாகச் சொல்லப்படுகிறது. மந்தாகினி ஆற்றின் கரையில் உள்ள இந்த இடத்தில் பச்சைப் பசுமையான காடுகள் உள்ளன.

*குண்ட்ச்சட்டி* :- ரிஷிகேசிலிருந்து 173 கி.மீ தொலைவிலும் அகஸ்தியமுனியிருந்து 15 கி.மீ தொலைவிலும் உள்ளது இந்த இடம். குப்தகாசி வழியாக கேதார் செல்லும் பாதை ஒன்றும் உக்கிமத் வழியாக சமேலிக்கு செல்லும். பாதை ஒன்றும் இங்கிருந்து செல்கின்றன.

*குப்தகாசி* : சமுத்திர மட்டத்திலிருந்து 1479 மீட்டர் உயர முள்ளது இந்த குப்தகாசி. குப்தகாசிக்கு எதிரில் உள்ள மலைகளின் மடியில் தொட்டில் போல் உள்ளது உக்கிமத் என்ற கிராமம். மணிகார்நிகா என்று சிறிய நீர் ஊற்று குண்டம் இங்கே உள்ளது. கேதாரில் பூஜை செய்யும் பூஜாரிகள் குப்தகாசி அருகே தான் வசிக்கிறார்கள். கௌரி குண்டத்திற்குச் செல்வதற்கு உள்ள நுழைவு வாசல்கள் (Gate) மற்றும் ரோடு வாகனங்களை சோதனையிடும் போலீஸ் சோதனை சாவடியும்

இங்கு உள்ளன. யாத்ரீகர்கள் இந்த போலீஸ் சோதனைச் சாவடியின் வழியாகச் செல்லும் நேரத்தைப் பதிவு செய்து கொள்ள வேண்டும்.

இங்கு உள்ள ரோடுகள் மிகவும் குறுகலானவை தவிர நல்ல பாதைகளாகவும் இல்லை. ஆனால் கேதார்நாத், மாத்மஹேஷ்வர் மற்றும் காலிமத்திற்குச் செல்லும் பாதைகள் என்ன முக்கியமான இடம் இது. இங்கு உள்ள அர்த்த நாரீஸ்வரர், சந்திரசேகர மகாதேவர் கோவில்கள் மிகவும் பழமையானவை இங்கிருந்து பனிபடர்ந்த சௌகாம்பா (Chaukhanba) என்ற மலை உச்சியும் மற்ற மலை உச்சிகளும் பார்ப்பதற்கு மிகவும் ரம்மியமாக இருக்கும்.

*நலாச்சட்டி* :- துர்காதேவியை லலிதாதேவி வடிவில் வழிபடும் சிறிய ஊர் இது. புத்தருடைய உருவமும் இங்கு உள்ளது. இது குப்தகாசியிலிருந்து 1 ½ கி.மீட்டரில் உள்ளது.

*ஃபடா* (Phata) :- ரிஷிகேசத்திலிருந்து 192 கி.மீ தூரத்தில் உள்ளது. குப்தகாசியிலிருந்து சோன் பிரயாகைக்கு ஃபடா வழியாகச் செல்லும் பாதை நல்லபாதைகளாக இல்லாவிடினும் வாகனங்கள் செல்ல முடியும்.

*ராம்பூர்* :- குப்தகாசியிலிருந்து 23 கி.மீ உள்ள இந்த சிறிய கிராமம் இரவு தங்குவதற்கு உகந்த இடம்.

*சோன்பிரயாகை* :- கேதார்நாத், புஸுகி ஏரிகளிலிருந்து வரும் மந்தாகினி, சோன்கங்கா நதிக்கரையில் உள்ள சிறிய கிராமம் சோன் கங்கா. யாத்திரையின் போது, மலை முன்னேற்ற கார்பரேஷன் (Hill Development Corparation) கூடாரங்கள் அமைத்து, பிரயாணிகளுக்கு தண்ணீர், மின்சாரம் மற்றும் தங்க வசதிகள் செய்து தருகின்றனர். இங்கிருந்து 5 கி.மீ தூரத்தில் உள்ள கௌரி குண்டிற்கு ஒரு பாதை உளன்ளது.

*கௌரிகுண்டம்* :- ரிஷிகேசத்திலிருந்து இந்த இடம் 209 கி.மீ, சோன்பிரயாகையிலிருந்து 5 கி.மீ ஆகும். மாதா கௌரிக்கு உள்ள பழமையான கோவில் மிகவும் பிரசித்தமாகும். இந்த இடத்தில் 2 வென்னீர் மற்றும் குளிர் நீர் ஊற்றுகளும் உள்ளன. இந்த இடம் வரை தான் வாகன வசதிகள் உள்ளன. இதற்கு மேல் நடந்து தான் செல்ல வேண்டும்.

*ராம் பாரா* (Ram Bara) :- கௌரி குண்டத்திலிருந்து 7 கி.மீ மேலே ஏறும் பாதையில் உள்ளது. இங்கு பச்சை பசுமையான காடுகளும் நீர்வீழ்ச்சிகளும் நிறைந்து காணப்படுகின்றன.

*கெருடச்சட்டி* :- இந்த இடத்திலிருந்து 3 கி.மீ உள்ள கேதார் உச்சி நன்கு தெரியும்.

*கேதார் நாத்* :- கௌரிகுண்டத்திலிருந்து 14 கி.மீ கேதாருக்குச் செல்வது அற்புதமான அனுபவமும் ஆகும். கருட்ச்சட்டி, ராம் பாரா வழியாகச்

செல்ல வேண்டும் போகும் வழியில் பல கோவில் களும் பசுமையான காடுகளும் நீர்வீழ்ச்சிகளும் ஆல்பைன் மலர்களும் நிறைந்து காணப்படுகின்றன. இங்கு உள்ள மலையிலிருந்து வருவது தான் தூதகங்கா ஆகும். பல ஆறுகளும் நீரோடைகளும் சேர்ந்து மந்தாகினி நதியாக பெருக்கெடுத்து ஓடுகிறது.

## பத்ரிநாத்திலிருந்து கேதாருக்கு உக்கிமத் வழியாகச் செல்லும் 2-வது பாதை.

இந்தப்பாதையானது ருத்ரபிரயாகை பாதையைப் போல் அவ்வளவு பிரசித்தமானது அல்ல. ஏனென்றால் ச்சோப்டா (Chopta) விற்கு ஏறுவது என்பது மிகவும் கடினமாகும். கௌரி குண்டத்தி லிருந்து 5 கி.மீ தூரத்திலுள்ள உக்கிமத்துக்கு பனிக் காலங்களில் பூஜாரிகள் உக்கிமத் வந்து விடுவார்கள். இங்கு தான் சிவன் பார்வதி, உஷாமந்தாதா அநிருத்தர்களுக்கான கோவில்கள் உள்ளன.

உக்கிமத்திலிருந்து 24 கி.மீ தூரத்தில் உள்ள தோகால்பிட்டா (Dogalbhita)வில் வன இலாகாவின் தங்குமிடம் (Forest Rest House) உள்ளது. இதற்குப் பக்கத்தில் உள்ளது தான் சோப்டா, இந்தச் சோப்டாவிலிருந்து ஹிமாலயத்தின் உச்சியைப் பார்ப்பதற்கு மிகவும் அற்புதமாக இருக்கும் இதன் அருகாமையில் உள்ளது தான் மந்தால்ச்சட்டி பள்ளத்தாக்கு.

*கோப்பேஷவர்* : ச்சமோலி ஜில்லாவின் தலைநகர் கோப்பேஷ்வர் மந்தாலிருந்து 11 கி.மீ தொலைவில் உள்ளது. ஜில்லாவின் அலுவலகங்கள் பல இங்கு உள்ளன. இங்கு ஒரு பெட்ரோல் பங்க் உள்ளது ஒரு சிவன் ஆலயம் பிரசித்தமானது.

*ச்சமோலி* (Chamoli) : இந்தச் சமோலியிலிருந்து 114 கி.மீ தூரம் கேதார். கோப்பேஷ்வரிலிருந்து ச்சமோலி 10 கி.மீ. இது அலக்நந்தாகரையில் உள்ள ஊர். பஸ் வழிப்பாதையாக சோன் பிரயாகையி லிருந்து உக்கிமத் 36 கி.மீ உக்கிமத்திலிருந்து பத்ரி 175 கி.மீ,

## கார்வால் ஹிமாலயம் மலையின் உயரங்கள் விவரம்

| *இடம்/ஸ்தலம்* | *உயரம் (அடிகள்)* | *மலைகள் பெயர்* |
|---|---|---|
| 1. பத்ரிநாத் | 10,350 | |
| 2. கேதார் நாத் | 11,750 | நந்ததேவி |
| 3. உக்கிமத் | 4,500 | |
| 4. திரியூகி நாராயண் | 6000 | காமெட் |
| 5. ராம் பாரா | 9,000 | மானா |
| 7. கௌரிகுண்ட் | 6,500 | " |
| 8. மத்யமகேஷ்வர் | 11,474 | சௌகாம்பா |
| 9. துங்கி நாத் | 12,070 | திரிசூல் |
| 10. ருத்ரநாத் | 11,670 | " |
| 11. அனுசூயா தேவி | 6,500 | தூனாகிரி |
| 11. ஹனுமான்ச்சட்டி | 8000 | பான்சூலி |
| 12. ருபகுண்ட் | 16,000 | சாங்பாங் |
| 13. சந்தரிவதனி | 8000 | " |

# பாகம் V

## மலர்கள் பள்ளத்தாக்கு

கண்ணைக் கவரும் வண்ணங்களில் விதவிதமான மலர்கள் அழகாக இங்கு மலர்ந்து காட்சியளிப்பதால் இந்தப் பள்ளத்தாக்கிற்கு மலர்கள் பள்ளத்தாக்கு என்றே பெயரானது. 1931ல் பிராஸ் ஸ்மித் என்பவரால் முதலில் காணப்பட்டது இந்தப் பள்ளத்தாக்கு.

## ஹரித்துவாரிலிருந்து மலர்கள் பள்ளத்தாக்கு

ஏற்கனவே கோவிந்த காட் என்பது ஹரித்துவாரிலிருந்து 294 கி.மீ என்று குறிப்பிட்டிருக்கிறது. பேருந்தில் ஜீப்பில் பிரயாணம் செய்பவர் ரிஷிகேஷ், தேவப்பிரயாகை, ஸ்ரீநகர், ருத்ரபிரயாகை, கோல்டர், கௌச்சார், தங்கானி, ஹலாங், ஜோஷிமட், விஷ்ணுப்பிரயாகை வழியாக வந்து கோவிந்தகாட் வழியாக இந்த மலர்கள் பள்ளத்தாக்கை அடைய முடியும். கோவிந்தகாட்டிலிருந்து 19 கி.மீ தூரத்திலுள்ளது இந்த மலர்கள் பள்ளத்தாக்கு.

| | தூரம் | உயரம் |
|---|---|---|
| ஹரித்துவார் - கோவிந்தகாட் (Bus) | 294 | 1829 |
| கோவிந்தகாட் - புய்னா (Bus) | 3 | 1920 |
| புய்னா - பையூந்தர் (நடை) | 7 | 2439 |
| பையூந்தர் - கங்காரியா (நடை) | 5 | 3049 |
| கங்காரியா - மலர்கள் பள்ளத்தாக்கு (நடை) | 4 | 3658 |

சீக்கியர்களுள் புனிதமான சிங் சாஹிப் குருத்வாரா இந்த கோவிந்த்காட், புய்னா, கங்காரியா ஆகிய இடங்களில் அமைந்திருக்கிறது. இங்கெல்லாம் தங்க வசதியான இடங்கள் உள்ளன. அலக்நந்தாவைக் கடந்த பின் காண்கிற காட்சியானது மலர் பள்ளத் தாக்கின் விசித்திரமான அழகும் பொலிவும் ஆகும். வழிநெடுக பனிபடர்ந்த பாலங்கள், ஆல்பைன் மலர்கள் இவைகள் கண்கொள்ள காட்சிகள். பாலத்தின் வழியாக லக்ஷ்மண கங்காவைக் கடந்தால் 1/2 கி.மீ தூரத்தில் கங்காரியவிலிருந்து மலர்கள் பள்ளத்தாக்குக்குப் போகும் வழி.

மலர்கள் பள்ளத்தாக்குக்குக் செல்ல உசித காலம் ஜூலை மத்தியிலிருந்து ஆகஸ்ட் மத்தி வரை. அப்போது மழையிருக் கும். மே, ஜூன் மாதங்களில் பூக்கள் துளிர்விடும். பிறகு மலரும். செப்டம்பர் மாதத்தில் பூக்கள் வாடி உலர்ந்து விடும். சில அபூர்வமான பூக்கள் பெயர்கள் ஆங்கிலத்தில் பொடண்டில்லாஸ், ப்ரிமுலாஸ், ரானன்குலஸ், பிரம்மகமல், ஆஸ்டாஸ், ஆண்ட்ரோஸகா, நோமோச் செரிஸ், ஃபிரிட்டலரிஸ் என்று கூறப்படுகின்றன. இந்தப் பள்ளத்தாக்கு 5 கி.மீ நீளமும் 2 கி.மீ அகலமானது. 3352 மீட்டருக்கு மேல் உள்ள பள்ளத்தாக்கு இந்தப் பள்ளத்தாக்கைப் பிரிப்பது புஷ்பவதி என்ற பெரிய நீரோடை. இந்த புஷ்பவதி நீரோடையானது லக்ஷ்மண் கங்காவில் கலக்கிறது.

## பாகம் VI

# ஸ்ரீ ஹேமகுண்ட் சாஹிப்

## குருகோவிந்தசிங் ஏரி

ஹேமகுண்ட் சமுத்திர மட்டத்திலிருந்து 4329 மீ உயரத்தில் அமைந்திருப்பது. இதைச் சுற்றி பனி சூழ்ந்த சிகரங்களுடன் கூடிய 7 மலைகளின் பிரதி பிம்பம் இந்த ஹேமகுண்ட் ஏரியில் பிரதிபலிக்கும். தாமரை மலர்கள் நிறைந்த இந்த ஏரி நீர் 'சுத்தமாகவும் இனிப்பாகவும் உள்ளது.

யாத்திரை மேற்கொள்ளும் குழுவில் நபர்கள் அதிகமாகவே இருந்தால் ஹேமகுண்டிலேயே தங்கலாம். ஆனால் குறைவாக இருந்தால் அவர்கள் கங்காரியாவிற்குத் திரும்புவதே நல்லது. கங்காரியா விலிருந்து மலர்கள் பள்ளத்தாக்கு 4 கி.மீ தூர முள்ளது. கங்காரியாவிலிருந்து ஒரு பாதை ஹேமகுண்டிற்கும், ஒரு ஒற்றையடிப் பாதை மலர்கள் பள்ளத்தாக்குக்கும் செல்கிறது. "ஹேம" என்றால் பனி; குண்ட் என்றால் குளம் அல்லது ஏரி. அதனால் தான் இதற்கு ஹேமகுண்ட் என்ற பெயர். ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்கள் இங்கு விஜயம் செய்ய உகந்த மாதங்கள். அதற்குப்பிறகு தாங்க முடியாத குளிராகவே இருக்குமாதலால் இங்கு வருவது மிகவும் சிரமமாகவே இருக்கும்.

பனிச் சிகரங்களடங்கிய ஏழு மலைகளுக்கு நடுவில் உள்ள ஏரிக்கரையில், குரு கோவிந்த சிங், தியானம் செய்தார் என்று குரு கிரந்த சாஹிப்பில் சொல்லப்பட்டிருக்கிறது. இவர் முற்பிறவியில் மேதாஸா ரிஷியாக இருந்தவராம். 1930-ல் ஹவில்தார் சோகன்சிங் இந்த இடத்தைக் கண்டுபிடித்து சீக்கியர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் இந்த ஹேமகுண்ட் புனிதமான இடமென்று சொல்லி யிருக்கிறார். ஹிந்துக்கள் சீக்கியர்கள் தவிர மற்ற எல்லா மதத்தினர்களும் கூட இங்கு வருகை தருகிறார்கள்.

பத்ரிநாத் யாத்ராவில் (பக்கம்-23) சொல்லியபடி பேருந்து மூலமாக ரிஷிகேசத்தி லிருந்து கோவிந்த காட் 270 கி.மீ தூரம், ஜோஷிமட்டிலிருந்து 20 கி.மீ கோவிந்தகாட்டை, பஸ், கார், அல்லது ஜீப்பில் சென்று அடையலாம். பூல்நா, பையந்தர் கங்காயா வழியாக ஹேமகுண்டிற்கு ஏறி வர, மூட்டை சுமப்போர்களும், மட்டக் குதிரைகளும் கிடைக்கின்றன.

கோவிந்த காட்டில் மிகவும் அழகான ஒரு குருத்துவாரா உள்ளது. தங்கவசதிகளும் சாப்பாடு வசதியும் செய்யப்பட் டுள்ளன. இது தவிர கங்காரியா வில் தர்மசாலாக்கள், தங்குமிடங்கள் கூட இருக்கின்றன. தபால் அலுவலகமும் உள்ளது. உயர்ந்த தேவதாரு மரங்கள் இதன் எழிலை இன்னும் கூட்டுகின்றன. குருத்வாராவில் குளிர் கம்பளிகள்

மற்றும் குளிர்தாங்கும் ஆடைகள் கொடுக்கிறார்கள். கங்காரியாவிலிருந்து ஹேமகுண்டிற்கு ஏறும் பாதை மிகவும் கடினமானதால் யாத்ரிகர்கள் தங்களுடன் தண்ணீர் பாட்டில்கள், நடக்கக் ஊன்றுகோல்கள், நல்ல ரப்பர் அடியுடன் கூடிய பூட்ஸ்கள் மற்றும் குளிர்தாங்கக் கூடிய உடைகள் இவற்றுடன் வரவேண்டும்.

நடுக்கும் குளிராக இருக்குமாதலால் இவைகள் மிகமிக அவசியம். தலைவலி, பேதி மற்றும் குளிர் ஜுரம் போன்ற வியாதிகளுக்கு முதலுதவி பெட்டிகள் மருந்துகளுடன் கண்டிப்பாக எடுத்து வர வேண்டும். கொசுக்கடிக்கு உள்ள மருந்துகளும் கொசுக்கள் வராமல் தவிர்க்க வேண்டியவைகளும் கூட வேண்டும். ஹேமகுண்டிலிருந்து செல்லும் ஹேமகங்கா புஷ்பவதியுடன் கலந்து பின்னர் அதுவே லக்ஷ்மண் கங்காவோடு சேர்கிறது.

## ஹேமகுண்டத்திற்கு பாதை வழிகள்

| | | தூரம் | உயரம் |
|---|---|---|---|
| ரிஷிகேஷ் கோவிந்தகாட் | (பஸ் வழியாக) 270 | 1829 | |
| கோவிந்தகாட்-பூயினா | (நடந்து) | 3 | 1920 |
| பூயினா - பைந்தர் | (நடந்து) | 7 | 2439 |
| பைந்தர் - கங்காரியா | (நடந்து) | 5 | 3049 |
| கங்காரியா - ஹேமகுண்ட் | | 5 | 4329 |

# பாகம் VII

# யமுனோத்திரி

சமுத்திரமட்டத்திலிருந்து 4421 மீட்டர் உயரத்திலுள்ள யமுனோத்திரி கோவிலானது யமுனையின் இடதுபுறக்கரையி லேயே கட்டப்பட்டிருக்கும் முக்கியமான திருக்கோவிலாகும். இங்கேயுள்ள வென்னீருற்றுகளில் முக்கியமானது "சூர்யா குண்ட்" ஆகும். சூர்யாகுண்ட் அருகில் திவ்ய சிலா பூஜிக்கப் படுகிறது. "யமுனாபாய் குண்ட்" என்ற நீருற்றும் புனிதமானது. யமுனோத்திரியானது ஹரித்துவாரிலிருந்து 246 கி.மீயும் ஜானகி பாய் சட்டியிலிருந்து 6 கி.மீ தொலைவிலும் அமைந்துள்ளது ஏப்ரல் மாதம் அல்லது மே மாதம் அக்ஷயதிதியன்று இந்தக் கோவில் திறக்கப்பட்டு தீபாவளியன்று மூடப் படுகிறது.

இந்தக் கோவிலில் பூஜை செய்யும் பண்டாக்கள் மிகவும் உதவிமனப்பான்மையுள்ளவர்கள். இவர்கள் ஜானகிச்சட்டி அருகாமையில் யமுனையின் மறுகரையில் உள்ள கார்சாலி என்ற கிராமத்தில் வசித்தார்கள்.

அசீத் முனிவர் தினமும் யமுனையிலும் கங்கையிலும் குளித்தவர் முதுமை காரணமாக கங்கோத்ரிக்குச் செல்ல முடியாத காரணத்தால்

கங்கை நதியே யமுனோத்ரிக்கு அவருக்காக அங்கே வந்தது. கார் வைத்திருப்பவர்கள் யமுனோத்ரிக்கு டேராடூன், முசோரி போன்ற இடங்களிலிருந்து வர இயலும். பொது போக்குவரத்து சாதனங்களை நம்பியிருக்கும் மற்ற யாத்ரீகர்கள் யாத்திரையை ரிஷிகேசத்திலிருந்து துவங்க வேண்டும். யமுனோத்ரிக்கு வர உகந்த மாதங்கள், மே, ஜுன், மற்றும் செப்டம்பர், அக்டோபர் மாதங்களாகும். நவம்பர் முதல் ஏப்ரல் வரை பனிக்கட்டிகள் மூடிக் கிடக்கும். ஆனால் மே முதல் செப்டம்பர் வரையிலும் குளிர்ந்திருந்தாலும் நன்றாக இருக்கும். ரிஷிகேசத்திலிருந்து ஹனுமாஞ்சட்டிக்கு பேருந்து வழியாக 209கி.மீ தூரமும் பின்பு 13கி.மீ தூரம் நடந்து செல்ல வேண்டும்.

## ஹரித்துவாரிலிந்து - யமுனோத்திரி

| | தூரம் | உயரம்மீ |
|---|---|---|
| ஹரித்துவார் - ரிஷிகேசம் | 24 கி.மீ | 340 " |
| ரிஷிகேசம் - நரேந்திரநகர் | 16 " | 1067 " |
| நரேந்திரநகர் -சம்பா(Chamba) | 46 " | 1524 " |
| சம்பா - தெஹ்ரி | 21 " | 770 " |
| தெஹ்ரி - தாராசு | 37 " | 1036 " |
| தாராசு - பிரம்மகால் | 15 " | 1158 " |
| பிரம்மகால் - பார்கோட் | 40 " | 1828 " |

| | | |
|---|---|---|
| பார்கோட் - சயனாச்சட்டி | 29 " | 1982 " |
| சயனாச்சட்டி - ஹனுமாஞ்சட்டி (பேருந்து வழியாக 233 கி.மீ) | 5 " | 2134 " |
| ஹனுமாஞ்சட்டி - பூல்ச்சட்டி (நடந்து) | 5 " | 2561 " |
| பூல்ச்சட்டி - ஜானகிபாய்ச்சட்டி (நடந்து) | 2 " | 2576 " |
| ஜானகிபாய்ச்சட்டி-யமுனோத்திரி (நடந்து) | 6 " | 3323 " |

*நரேந்திர நகர்* : ரிஷிகேசத்திலிருந்து 2. கி.மீ தூரத்தில் இரண்டு வழிப்பாதைகள் செல்கின்றன. ஒன்று முனிசிரேதி வழியாக பத்ரிநாத் செல்லும் பாதை, இன்னொன்று கங்கோத்ரி, யமுனோத்திரி செல்லும் பாதை. ரிஷிகேசத்திலிருந்து நரேந்திரநகர் 16 கி.மீ உள்ளது. தெஹ்ரி, கார்வாலின் ஜில்லாவைச் சோந்த சார்க்கார் அலுவலகங்கள் பல இங்கு இருக்கின்றன. ம்ஹாராஜா நரேந்திரஷாவின் அரண்மனை 9 கி.மீ தூரத்தில் உள்ள குஞ்சபுரி என்ற இடத்தில் இருக்கிறது. அங்கிருந்து பார்த்தால் ஹிமாலயம் மிகவும் ரம்மியமாக காட்சியளிக்கும்.

*சம்பா* (Chamba) : ரிஷிகேசத்திலிருந்து 62 கி.மீ உள்ள சம்பா அனுபவிக்கத்தகுந்த சீதோஷ்ண நிலையையுடைய ரம்மியமான இடம். இந்த இடத்திலிருந்து மிக உயர்ந்த பண்டார்பூன்ச் என்ற உச்சியைப் பார்க்க இயலும். இங்கிருந்து 55 கி.மீ தூரத்திலுள்ள

முசௌரிக்குச் செல்ல ஒரு பாதை உள்ளது. இந்தப் பாதையில் சம்பாவிலிருந்து 21 கி.மீ தூரத்தில் மிகவும் அழகான சூர்காந்த தேவியின் கோவில் இருக்கிறது.

*டோபாட்டா* : சம்பாவிலிருந்து 17 கி.மீயும் ரிஷிகேசத்தி லிருந்து 79 கி.மீயும் உள்ள டெஹ்ரி யிலிருந்து டோபாட்டா 4 கி.மீயில் உள்ளது. யமுனோத்திரி, கங்கோத்ரிக்குச் செல்பவர்கள் தெஹ்ரிக்குப் போகும் பாதை வழியாகச் செல்லாமல் நேராக தாராசு போக வேண்டும். இங்கு தான் உத்தரகாசிக்கும் ஸ்ரீநகருக்கும் போகும் பாதைகள் சந்திக்கின்றன.

*தெஹ்ரி* : சமுத்திர மட்டத்திலிருந்து 770 மீட்டர் உயரத்திலும் சம்பாவிலிருந்து 21 கி.மீ தூரத்திலும் அமைந்துள்ள பழைய தலைநகரான டெஹ்ரி, டெஹ்ரி கார்வாலைச்சேர்ந்த சுதர்சன் ஷா மஹாராஜாவினால் நிர்மாணிக்கப்பட்டது. பாகீரதி நதியும் பிலன்கங்கா நதியும் கூடுமிடத்தில் உள்ளது. தேவப்பிரயாகை, உத்தரகாசி, ஸ்ரீநகர், மற்றும் தில்வாரா இடங்களுக்குச் செல்லும் 4 பாதைகள் கூடுமிடம். இது வாகன ஊர்திகளில் செல்வோர் இங்கிருந்தே பெட்ரோல் எடுத்துச் செல்வது நலம். தேவபிரயாகையிலிருந்து கார்சாலா 16½ கி.மீ கோட்டேஷ்வர், 6½ கி.மீ, பந்த்ரையா 10 கி.மீ கைரீ 14½ கி.மீ. கைரியிலிருந்து தெஹ்ரி 9½ கி.மீ.

| | |
|---|---|
| ரிஷிகேஷ் - தெஹ்ரி | 57 கி.மீ |
| முசோரி - தெஹ்ரி | 83 கி.மீ |
| தேவபிரயாகை - தெஹ்ரி | 76 கி.மீ |

*தாராசு* : டோபோட்டோவிலிருந்து தாராசு என்னுமிடம் 41 கி.மீ உத்ரகாசி ஜில்லாவின் ஓரத்தில் உள்ளது. கூர்மோலாநதியும் பாகீரதி நதியும் கூடுமிடம் தாராசு. பாகீரதி கரையிலிருந்து ஒருபாதை பிரிந்து கங்கோத்ரிக்கு செல்கிறது.

*பிரம்மகால்* : இந்தச் சிறிய ஊர் தாராசு விலிருந்து 15 கி.மீரும் ஹரித்துவாரிலிருந்து 159 கி.மீ.யும் உள்ளது.

*பார்கோட்* : பிரம்மகாலிலிருந்து 40 கி.மீயும் சமுத்திர மட்டத்திலிருந்து 1828 மீட்டர் உயரத்திலும் உள்ள இடம் பார்கோட். பாதையானது ராரிகா தண்டா என்ற உயரமான இடத்திற்கு ஏறி அங்கிருந்து பார்கோட்டுக்கு இறங்குகிறது. இந்த இடம் பார்க்க ஒரு பக்கம் உயர்ந்த மலயாகவும் மறுபக்கம் பள்ளத் தாக்காகவும் பார்ப்பதற்கு மிக மிக ரம்மியமாக உள்ளது. பண்டார்பூன்ஞ் என்ற உயரமான சிகரத்தைக் இங்கிருந்து காண முடியும். முசோரி, கால்சி போகும் பாதைகள் இந்த ஊரில் சந்திக்கின்றன. ஒருபாதை இங்கிருந்து ஆரம்பித்து, யமுனைக்கரையோரமாக யமுனோத்ரிக்குச் செல்கிறது.

*சயானாச்சட்டி* : பார்கோட்டிலிருந்து 29 கி.மீ தொலைவில் உள்ளது சயானாச்சட்டி, இங்கு யாத்ரிகர் தங்க முடியும். பார்கோட் என்ற இடத்திலிருந்து சங்கானி 7 கி.மீ கங்கானியி லிருந்து மேலும் 9 கி.மீ குத் நவுரி என்ற இடம் உள்ளது. இந்த கிராமம் மிகவும் சுறுசுறுப்பானது பக்கத்து ஊர்களிலிருந்து வேலைக்காக இங்கு வருகிறார்கள். குறிப்பாக

யாத்ரிகர்கள் வரும் காலங்களில் மிகவும் உற்சாகமாகவும் துடிப்புடனும் இருப்பார்கள்.

*ஹனுமாஞ்சட்டி* : இந்த அழகான கிராமம் சயானாவிலிருந்து 5 கி.மீ தூரத்தில் அமைந்துள்ளது. இங்கிருந்து 13கி.மீ தூரத்திலுள்ள யமுனோத்ரிக்கு, ஃபூல்சட்டி, ஜானகிபாய்சட்டி வழியாக செல்லும் மலைப்பாதை ஆரம்பிக்கிறது. ஹனுமாஞ்சட்டியி லிருந்து பூல்சட்டி 5 கி.மீ. பூல்சட்டிக்கும் ஜானகி பாய்க்கு மிடையே உள்ள தூரம் 2 கி.மீ. இந்த 7 கி.மீ பாதையில் பயணம் உற்சாகமாக இருக்கும்.

*ஜானகிபாய்ச்சட்டி* : யமுனோத்ரியிலிருந்து ஜானகிபாய்ச்சட்டி 6 கி.மீ தூரம் ஏறுமுகமான மலைப்பாதை, மட்டக் குதிரைகளும், தண்டிகளும் சவாரிக்கு இங்கு கிடைக்கும். காவல்துறை, அஞ்சல், மற்றும் சில கடைகள் யாத்திரை காலங்களில் மட்டுமே திறந்திருக்கும். கடைசி 1/2 கி.மீ பாதை மிகவும் செங்குத்தானது. ஆனால் சுவர்க்கத்திற்குச் செல்லும் பாதைபோல், குளிர்ந்தகாற்றுடன் இருக்கும். ரிஷிகேசத்திலிருந்து 216 கி.மீ உள்ள இந்த இடம் யமுனோத்ரி பாதையில் உள்ள கடைசி இடம்.

## யமுனோத்ரி - கங்கோத்ரி பாதை

| | தூரம் | மீஉயரம் |
|---|---|---|
| யமுனோத்ரி-ஹனுமான்ச்சட்டி (நடந்து) | 13 " | 2134 " |
| ஹனுமான்ச்சட்டி-சயானாச்சட்டி(பஸ்) | 5 " | 1982 " |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சயானாச்சட்டி - பார்கோட் | (பஸ்) | 29 | " | 1828 | " |
| பார்கோட் - தாராசு | " | 55 | " | 1036 | " |
| தாராசு - உத்தரகாசி | " | 26 | " | 1158 | " |
| உத்தரகாசி - கங்கோரி | " | 4 | " | 1219 | " |
| கங்கோரி - மனேரி | " | 6 | " | 1372 | " |
| மனேரி - பாட்வாரி | " | 19 | " | 1677 | " |
| பாட்வாரி - கங்நானி | " | 14 | " | 1982 | " |
| கங்நானி - சுகி | " | 18 | " | 2744 | " |
| சுகி - ஜாலா | " | 7 | " | 2439 | " |
| ஜாலா - ஹர்சில் | " | 6 | " | 2591 | " |
| ஹர்சில் - லங்கா | " | 13 | " | 2652 | " |
| லங்கா - பைரான் காட்டி (Bhairan Ghoti) (நடந்து) | | 3 | " | 2652 | " |
| பைரான்காட்டி - கங்கோத்ரி (பஸ் வழியாக) | | 10 | " | 3140 | " |
| | | 228 கி.மீ | | | |

குறிப்பு: - யாத்ரிகர்கள் யமுனோத்ரியிலிருந்து கங்கோத்ரி செல்பவர்கள் நேராக உத்ரகாசி சென்று (தாராசு போகாமல்) போகும் பாதையில் 2 கி.மீ தூரத்தில் உள்ள சந்திப்பில் திரும்பி (தாராசு போகாமலேயே) செல்ல முடியும்.

# தேராதூன் - யமுனோத்ரி பாதை

| | தூரம் | மீஉயரம் |
|---|---|---|
| தேராதூன் - முசோரி (பஸ்) | 36 " | 1921 " |
| முசோரி - கெம்ப்டி நீர்வீழ்ச்சி(பஸ்) | 12 " | 1524 " |
| கெம்ப்டி - யமுனா பாலம் (பஸ்) | 16 " | 772 " |
| யமுனாபாலம் - டம்டா (பஸ்) | 25 " | 1372 " |
| டம்டா - நௌகான் | 28 " | 1524 " |
| நௌகான் - பார்கோட் | 11 " | 1828 " |
| பார்கோட் - சயானாச்சட்டி | 29 " | 1982 " |
| சயானாச்சட்டி - ஹனுமாஞ்சட்டி | 5 " | 2134 " |
| ஹனுமாஞ்சட்டி - பூல்ச்சட்டி(நடந்து) | 5 " | 2561 " |
| பூல்ச்சட்டி - ஜானகிபாய்ச்சட்டி " | 2 " | 2576 " |
| ஜானகிபாய்ச்சட்டி - யமுனோத்ரி " | 6 " | 3323 " |
| | 175 கி.மீ | |

குறிப்பு:- இன்னும் அதிகமான தகவல்களுக்கு ஆங்கிலத் தில் அச்சடிக்கப்பட்ட புத்தகங்கள் "" M/s. Karan Singh Amar Singh, Bara Bazaar, Hardwar (U.P) என்ற முகவரியில் கிடைக்கும்.

(More detailed information is contained in "DEHRADUN - MUSSORIE GUIDE" available fom M/s. Karan Singh Amar Singh in Bara Bazaar, Hardwar City U.P.)

# பாகம் VIII

## கங்கோத்திரி

### கங்கை இறங்கி வரும் இடம்.

பாகீரதி (கங்கை) நதியின் வலது கரையில் அமைந்துள்ளது கங்காமாதா கோவில். கீழ் சமவெளியில் கங்கை நதியின் ஓட்டம் சில இடங்களில் ஆரவாரத்துடனும், சில இடங்களில் அமைதி யாகவும் இருக்கும். ஆனால் கங்கோத்ரியில் நொப்பும் நுரையுமாக சந்தோஷம் கொப்பளிக்க ஓடுகிறது. அலகானந்தா, சரஸ்வதி, யமுனை நதிகளிலிருந்து மாறுபட்டது (பாகீரதி) கங்கை நதி. அதனால் தான் கங்கோத்ரி நீரை தெற்கேயுள்ள ர.ாமேஸ்வரத்திற்கு எடுத்துச் சென்று சிவ பெருமானுக்கு -அபிஷேகம் செய்கிறார்கள். பாகீரதியின் இடது கரையில் சில ஆஸ்ரமங்களும் தர்மசாலாக்களும் உள்ளன.

பாகீரதி பூஜாரிகளும் பண்டாக்களும் இங்கு பக்கத்தில் உள்ள முக்வா என்ற கிராமத்தில் குடி கொண்டுள்ளார்கள். கங்கோத்ரி கோவிலிலும், கங்கைக் கரையிலும் கங்காமாதாவுக்கு எல்லா பூஜைகளும் செய்யப்படுகின்றன.

கங்கோத்ரியில் உள்ள கோவிலானது கூர்க்கா ஜெனரல் A.S.தாப்பா என்பவரால் கட்டப்பட்டது. இக்கோவில் சமுத்திர மட்டத்திலிருந்து 3140 மீட்டர்

உயரத்தில் உள்ளது. பகீரதன் தவம் செய்ததாகச் சொல்லப்படும் "பகீரதசிலா" எனப்படும் கற்பலகை, கங்கோத்ரி கோவில் அருகில் உள்ளது. கங்கை நீரில் எந்த அப்பழுக்கும் இல்லாமல் ஸபடிகம் போல் இருக்கும். எத்தனை ஆண்டுகள் வேண்டுமானாலும் வைத்திருக்கலாம், கெடுவதில்லை, ஒருவன் கங்கையில் நீராடினால் அவன் பாவங்கள் அனைத்தும் களையப்படுவதாக ஒரு நம்பிக்கை. யமுனோத்திரியின் ஆலயம் திறந்து மூடும் அதேகாலங்களில் தான் கங்கா மாதாவின் கோவிலும் திறந்து மூடப்படுகிறது. கங்கோத்ரி யமுனோத்ரியி லிருந்து 228 கி.மீ தூரம் ரிஷிகேசத்தி லிருந்து 248 கி.மீ தூரத்திலும் உள்ளது. கௌரி குண்டம் தேவகுண்டம் பிரசித்த பெற்றவைகளாகும். யமுனோத்திரிக்குச் சொல்லப்பட்டது போலவே இதற்கும் மே, ஜுன், மற்றும் செப்ட்ம்பர், அக்டோபர் மாதங்கள் யாத்ரிகர்கள் செல்லத் தகுந்த மாதங்கள். நவம்பர் மாதம் முதல் ஏப்ரல் வரை அடர் பனிக்காலம். மே மாதம் முதல் நவம்பர் வரை குளிர்காலம் இதில் ஜூலை முதல் செப்டம்பர் வரை மழைக்காலம். யமுனோத்ரிக்கும் கங் கோத்ரிக்கும் செல்லும் பாதை ஒன்று தான். ரிஷிகேசத்திலிருந்து 120 கி.மீ தூரத்தில் உள்ள தாராசுவிலிருந்து உத்தரகாசி வழியாக கங்கோத்திரிக்குச் செல்கிறது. ஹரித்வாரிலிருந்து தாராசுக்கான விவரங்களுக்கு, இப்புத்தகத்தில் பக்கம் 40-ல் உள்ள யமுனோத்ரி என்ற பாகத்தைப் பார்க்கவும்.

# ஹரித்துவாரிலிருந்து கங்கோத்ரிக்கு பாதை

| | தூரம் | மீஉயரம் |
|---|---|---|
| ஹரித்துவார் - தாராசு (ரிஷிகேஷ், நரேந்திர நகர், சம்பா தெஹ்ரி வழியாக) | 144 " | 1036 " |
| தாராசு - உத்தரகாசி | 28 " | 1158 " |
| உத்தரகாசி - கங்கோரி | 4 " | 1219 " |
| கங்கோரி - மனேரி | 6 " | 1372 " |
| மனேரி - பட்வாரி | 19 " | 1677 " |
| பட்வாரி - கங்கானி | 14 " | 1982 " |
| கங்கானி - சுகி | 18 " | 2744 " |
| சுகி - ஜாலா | 7 " | 2439 " |
| ஜர்லா - ஹர்சில் | 6 " | 2591 " |
| ஹர்சில் - லங்தா (பஸ் மூலம் 259 கிமீ | 13 " | 2652 " |
| லங்கா - பைரான்ச்சட்டி (நடந்து) | 3 " | 2652 " |
| பைரான்ச்சட்டி - கங்கோத்ரி(நடந்து) | 10 " | 3140 " |
| | 272 கி.மீ | |

ஹரித்வாரிலிருந்து கோகுலத்திற்கான பிரயாணத்திற்கு பக்கம் ..........ஐப் பார்க்கவும்.

*உத்தரகாசி* : - மிகவும் வளம் மிகுந்த உத்தரகாசி கங்கா நதியின் கரையிலே அமைந்துள்ளது. இங்கு சரித்திரப் பிரசித்த பெற்ற பல கோவில்கள் உள்ளன. பல ஆஸ்ரமங்கள் தர்மசாலாக்கள் நிறைந்திருக்கின்றன.

பல கோவில்களில் மிகவும் பிரசித்தமானது சிவபெருமானுக்காக அமைந்த பகவான் விஸ்வநாத்

கோவிலாகும். சக்தி மற்றொரு பிரசித்தமான கோவில் மற்றும் காளிகோவில், ஏகாதச ருத்ரர் கோவிலையும் பரசுராமர் கோவிலையும் இங்கிருந்து பார்க்கலாம். மகரசங்கராந்தியை ஒட்டி 7 நாட்களுக்கு பிரபலமான விழா கொண்டாடப்படும். நேரு இன்ஸ்டியூட் ஆப் மௌண்டனியரிங் ( Nehru Institute of Mountaineer-ing) இங்கு உள்ளது. இந்தப் பயிற்சிப் பள்ளியில் சிறுவர்களுக்கு மலையேறக்கற்றுக் கொடுக்கப் படுகிறது. உஜாலி என்னுமிடம் இங்கிருந்து ஒரு கி.மீட்டரில் உள்ளது. இந்த உஜாலியில் பல மஹான்களும் சன்யாசிகளும் கூட்டமாக ,ஒரு காலனியில் வசிக்கிறார்கள். உத்தரகாசியானது தராசுவிலிருந்து 28 கி.மீ உள்ளது.

*கங்கோரி* :- உத்தரகாசியிலிருந்து கங்கோத்ரிக் கான பாதையில் 4 கி.மீ தூரத்தில் கங்கோர்ரி அமைந்திருக்கிறது. இங்கிருந்து டோடிட்டால் என்ற ஏரிக்கு யாத்ரிகர்கள் நடந்து செல்ல முடியும். இந்த ஏரி இயற்கை அழகு நிறைந்ததாகும். சமுத்திர மட்டத்திலிருந்து 3024 மீட்டர் உயரத்தில் உள்ளது.

*மனேரி* :- இது ரிஷிகேசத்திலிருந்து 158 கி,மீ தூரத்தில் உள்ளது. இங்கு பாகீரதி நதியிலிருந்து மனேரி - பாலி என்ற அணை கட்டப்பட்டுள்ளது. அணைக்கட்டின் உயரம் 39 மீட்டர்.

*பட்வாரி* :-மனேரியிலிருந்து 19 கி.மீ தொலை வில் உள்ள இந்த பட்வாரியில் சிறிய சந்தை (மார்க்கெட்) உள்ளது. இந்த ஊருக்கு கங்கோத்ரி யிலிருந்து குதிரை மீது வரக் கூடிய பாதை ஒன்று வந்து கேதார்நாத்திற்கு பிரிந்து செல்கிறது.

*கங்நானி* :- இந்த கங்நானி ரிஷிகேசத்திலிருந்து 191 கி.மீ யமுனோத்திரியிலிருந்து 171 கி.மீ இந்த இடம் தியானம் செய்ய மிகவும் உகந்த இடம். கங்கோத்ரிக்கு நடந்து செல்லும் யாத்ரிகர்கள் முன் காலங்களில் தான். ஆனால் இப்போது பஸ்வசதி ஏற்பட்டு விட்டதால் இதன்மதிப்பு குறைந்து விட்டது. குளிக்க இங்கு சூடான நீரூற்றுகள் நிறைய உண்டு.

*சுகி* :- கங்நானியிலிருந்து 18 கி,மீ தொலைவில் உள்ள சுகி 2744 மீட்டர் உயரத்தில் உள்ளது. உத்தரகாசியிலிருந்து கங்கோத்ரிக்குச் செல்லும் பாதைகள் உயர்ந்து உயர்ந்து சென்று ஹிமாலயத் திற்கு ஒரு மகுடம் வைத்தது போல் காணப்படும். பார்ப்பதற்கு மிகவும் ரம்மியமாக இருக்கும்.

*ஜாலா* :- இது சுகியிலிருந்து 17 கி.மீ. இந்த 305 மீட்டர் மலை இறக்கம் புத்துணர்ச்சியை் தூண்டக் கூடியதாக இருக்கும். ஜாலாவிலிருந்து ஒரு பாதை பாகீரதியின் இடது கரைக்குத் தாண்டி நதிக்கு இணையாகச் செல்லும்.

*ஹர்சில்* :- இந்த சிறிய ஊர் ஜாலாவிலிருந்து 6 கி.மீ கங்கைநதியின் ஒரு அழகிய சமவெளியான இங்கிருந்து லக்ஷ்மி நாராயணனின் கோவிலைப் பார்க்கலாம். ஹர்சில்லிருந்து ஜங்லா ஒரு மனமகிழும் பாதை.

*லங்காச்சட்டி* :- இந்த இடம் யாத்ரிகர்கள் தங்கக்கூடிய சிறிய இடமாகும். இந்த இடம் வரை தான் மோட்டார்கள் வர முடியும். இதற்குமேல் உள்ள பாதைகள் சுப்பி மட்டுமே போடப்பட்டவை.

ரிஷிகேசிலிருந்து இது 235 கி.மீ யமுனோத்திரி யிலிருந்து 215 மீ. இதற்கு மேல் கங்கோத்ரி செல்லும்பாதை நடந்து போக வேண்டியபாதை. அல்லது டாண்டிகள் மற்றும் மட்டக் குதிரைகள் மூலம் செல்ல வேண்டும். நேரான இந்தப் பாதை பாகீரதி நதியை இங்கே கடக்கிறது.

*பைரான்ச்சுட்டி* : தங்குவதற்கு கடைசியான இடம் இது தான். இதற்கு மேல் 3 கி.மீ மலைப்பாதை நடந்து தான் செல்ல வேண்டும். இப்போது தான ஒரு சிறிய மோட்டார் கார் வாகனம் செல்ல ஒரு பாலம் கட்டப்பட்டிருக்கிறது. ஜானவி நதியும் பாகீரதி நதியும் சங்கமிக்கும் இந்த இடம் மிகவும் அழகான ரம்மியமான இடம். ஆனால் இப்போது சில வாகனங்கள் பிரிக்கப்பட்டு ட்ராலிமூலம் ஜானவி நதியைக் கடந்து பைரான் காட்டியில் மறுபடியும் சேர்க்கப்பட்டுச் செல்ல முடியும். ஆகவே இங்கு கார்களும் ஜீப்களும் கூட கிடைக்கும். இங்கிருந்து கங்கோத்ரி 10 கி.மீ தூரம். ஆனால் கார் ஜீப் போன்ற வாகனங்களின் வாடகை மிகவும் கூடுதலாக இருக்கும்.

## கௌமுக்

இந்த கௌமுக தான் கங்கையின் அங்கீகரிக் கப்பட்ட நதி மூலம் 6 முதல் 8 கி.மீ வரை அகலமும், 24 கி.மீ நீளமும் உள்ள இந்த கங்கோத்ரி பனிப்பாதை சமுத்திர மட்டத்திலிருந்து 4255 மீட்டர் உயரத்தில் உள்ளத. இது கங்கோத்ரி சிகரத்தின் மையத்தில் உள்ளது. ஜூன் முதல் செப்டம்பர் வரை

இங்கு செல்ல முடியும். அக்டோபரிலிருந்து ஜுன் வரை பனிமூடிக் கிடக்கும்.

யாத்ரிகர்கள் தாங்க முடியாத குளிரில் ஒரே ஒரு முழுக்குப் போட்டாலும் கூட போதும் அனைத்துப் பாபங்களும் அகன்று விடும் என்பது ஹிந்துக்களின் அசைக்க முடியாத நம்பிக்கை. ஒரே ஒரு முழுக்கு போட்டாலே இப்படி என்றால் பல தடவை கள் முழுகி எழுந்தால் எப்படியிருக்கும். சகலவித பாபங்களும் நீங்கும் என்பதில் ஐயமில்லை. கௌமுக்கு மேலே சுமார் மூன்று கிலோ மீட்டரில், மேரு, கங்கோத்ரி பனிமலைகளுக் கிடையே "தபோவனம்" என்கிற சமவெளி இருக்கிறது. மனதை கொள்ளை கொள்ளக்கூடிய ஒரு அழகிய இடம் இது. இதற்கு எதிரில் இருப்பது நந்தவனம். புகழ் வாய்நத சுமேருமலை இங்கிருந்து சில கிலோ மீட்டர் தூர்த்தில் தான் உள்ளது.

*கௌரிகுண்ட்டும் தேவகாட்டும்* :- தேவ கங்கா ஓடையானது தேவகாட்டிலிருந்து பாய்கிறது. கேதார் கங்காவிலிருந்து பார்த்தால் கங்கா மந்திர், ஷிவ்லிங்க, பிரம்ம சங்கராச்சார்ய போன்ற சிகரங் களைக் காணமுடியும். இந்த கங்கையானவள் கௌரி குண்ட்டின் செழிப்பான சமவெளிகளின் வழியே பாய்ந்து வங்காள விரிகுடாவை அடைகிறது.

## கங்கோத்ரி - கேதார் நாத்

கங்கோத்ரியிலிருந்து கேதார் செல்லும் யாத்ரிகர் கள் திரும்ப உத்தரகாசி, தாராசு வழியாக தெஹ்ரி வந்து தான் செல்ல வேண்டும். கங்கோத்ரியிலிருந்து

தெஹ்ரி 165 கி,மீ தூரம். கேதாருக்கு துஹ்ரியிலிருந்து 2 வழிகளில் செல்ல முடியும். முதலாவதாக கன்சாலிச்சிர்பாத்ரி, தில்வாரா வழியாக கேதார் செல்லும் வழி, இது மொத்தம் 183 கி.மீ தூரம். மற்றொன்று ஸ்ரீநகர், ருத்ரபிரயாகை தில்வாரா வழியாக கேதார் செல்லும் பாதை மொத்தம் 178 கி.மீ தூரம். மொத்தத்தில் இந்தக் கடைசி பகுதியான யாத்திரை மனச்சந்தோஷம் நிறைந்தது. இங்குள்ள, பூத்துக் குலுங்கும், நறுமண வாசமுள்ள காடுகள் யாத்ரீகர்களை உற்சாகப்படுத்தி, பிரயாணத்தை மகிழ்ச்சிகரமாகவும், தெம்பாகவும் ஆக்குகின்றன.

## கங்கோத்ரி to கேதார்நாத்
## மலையேறுபவர்களுக்கு. வழிகள்

| | தூரம் | கி.மீ | உயரம் | மீ. |
|---|---|---|---|---|
| கங்கோத்ரி | | | 3140 | " |
| பாட்வாரி | 71 | | 1677 | " |
| மாலா | 2 | " | 1478 | " |
| சௌரிகாட் | 5 | " | 1218 | " |
| பியாலு | 3 | " | 2286 | " |
| சுனாச்சாட்டி | 3 | " | 1463 | " |
| பேலக் | 4 | " | 2439 | " |
| பாங்ராமா | 5 | " | 2073 | " |
| ஜாலா | 4 | " | 2439 | " |
| ஆகுண்ட் | 3 | " | 1981 | " |
| தாட்டிகலஹார் | 2 | " | 1524 | " |
| டோலாச்சாட்டி | 4 | " | 1311 | " |

| | | | | |
|---|---|---|---|---|
| பைரன்ச்சாட்டி | 3 | " | 2439 | " |
| குட்டு | 9 | " | 1524 | " |
| கவானாச்சாட்டி | 1 | " | 1677 | " |
| கௌமாண்டா | 3 | " | 2134 | " |
| தூப்பாண்டா | 3 | " | 2896 | " |
| பான்வாலி | 3 | " | 3963 | " |
| குயூன்கோலக்கால் | 4 | " | 3658 | " |
| மாகூக்கிமண்டி | 2 | " | 3049 | " |
| திரியூகிநாராயண் | 5 | " | 1982 | " |
| சோன்ப்பிரயாக் | 3 | " | 1829 | " |
| கௌரிகுண்ட் | 5 | " | 1982 | " |
| ராமபாரா | 7 | " | 2591 | " |
| கரு்ர்ச்சட்டி | 4 | " | 3262 | " |
| கேதார்நாத் | 3 | " | 3583 | " |
| | 161 | கி.மீ | | |

மலையேறும் வழிகள் முழுதும் ஆஸ்ரமங்கள், தர்மசாலாக்கள், தங்குமிடங்கள் உள்ளன. பல இடங்களிலுள்ள காளி கம்ப்ளிதர்மாசாலாக்கள் மிகவும் பிரசித்தமானவை. இதே போல யமுனோத்ரியிலிருந்தும் கங்கோத்ரிக்கும் 2 பாதைகள் உள்ளன. முதலாவதாக துக்ரிதார், உச்சாதர், கல்ரிட்ஜ் வழியாக ஹனுமாஞ் சாட்டியிலிருந்து கங்கோத்ரிக்குச் செல்லும் பாதை. மற்றொரு பாதை கங்கானியிலிருந்து சிம்லி, சின்காட் வழியாக நாக்கூரி செல்லும் வழி. நாக்கூரி உத்தரகாசி யிலிருந்து தெற்கே 6 கி.மீ ஆனால் மலையேறுபவர்கள் கண்டிப்பாக உடல் வலிமை உள்ளவர்களாக இருக்க வேண்டும்.

# மானசரோவர், கைலாஷ் யாத்ரை

ஒருவன் மானசரோவர், கைலாஷ், யாத்திரையை மேற் கொள்வனேயாகில் அவன் மனத்தில் நிச்சயமாக நம் நாட்டின் பழங்காலப் பெருமைகள், வரலாறுகள் புலப்படும். அதோடு மட்டுமல்லாமல் நிச்சயமாக இந்த நாட்டின் அதிபுனிதமான இடத்திற்குச் சென்று வந்த மகிழ்ச்சியும் பெருமையும், சந்தோஷமும், திருப்தியும் நிச்சயம் கிட்டும். பத்ரிநாத்திலிருந்து கைலாஷ் 305 கி.மீ தூரமும், அல்மோராவிலிருந்து 405 கி.மீ தூரமும் ஆகும்.

தற்காலத்தில் அல்மோரா வழியாகச் செல்லும் பாதை எங்கும் நல்ல வசதிகள் செய்து தரப் பட்டுள்ளன. கஷ்டங்கள் கூட குறைந்து கொண்டு வருகின்றன. ஆனாலும் கூட கைலாஷ் யர்த்திரை யானது அவ்வளவு சுலபமானது என்று எண்ணக் கூடாது. ஆனாலும் வழியெங்கும் செய்யப்பட்டுள்ள வசதிகளினால் அல்மோரா வழியாக செல்லும் பிரயாணம், மற்ற வழிகளில் செல்வதை விட சுலபமாகவும், இன்னல்கள் குறைந்தும் இருக்கிறது. கைலாஷ் யாத்திரைக்கு ஜூன் மாதம் 2-வது வாரம் உகந்தது என்றாலும் யாத்திரைக்கு வேண்டிய தயாரிப்புகள் அல்மோராவிலிருந்து பொதுவாக மேற்கொள்ளப்பட வேண்டியிருக்கிறது. பாரிசைனா, (14 கி.மீ) தௌல் சைனா (10கி.மீ) கனாரிசைனா (7 கி.மீ), ஷெநாகாட் (10 கி.மீ) கானாய் (10 கி.மீ) ஜால் கோலா (10 கி.மீ) பேரிங் (10கி.மீ) தால் (17கி.மீ) தீதிகாட் (14கி.மீ) ஆசுக்கோட் (16கி.மீ) பால்வாகோட் (21கி.மீ) தார்ச்சூலா (20கி.மீ) கேலா (17கி.மீ)

சௌன்பாஸ் (14கி.மீ) கல்லகாட் (20.கி.மீ) காலாப்பானி (17 கி.மீ) மால்ப்பா (8கி.மீ) பூடி (12கி.மீ) கார்பியாங் (10 கி.மீ) வழியாக காலாப்பானி வரை மோட்டார் வாகன வசதிகள் உள்ளன. காலாப்பானியிலிருந்து மானசரோவர் ஏரி வரை மீதியுள்ள தூரம் முழுவதும் சோன்ச்சான் (10 கிமீ), விப்புலேக் தணவாய் (10கி.மீ) தாக்லாகோட்மண்டி (10கி.மீ) ராங்கான் (8 கி.மீ) சூர்பாமான்தத்தா (17கி.மீ) வழியாக நடந்து செல்ல வேண்டும். அங்கிருந்து நடந்து ஜுகும்பா, குஹா, பார்க்கா, தார்ச்சான் வழியாக கைலாஷ் அடைய வேண்டும். தார்ச்சான் கிராமம் கைலாஷ் அருகில் உள்ளதாகும். வழியெங்கும் யாத்ரிகர்களுக்கு கிராம மக்கள் உதவிகள் செய்கிறார்கள். என்பது குறிப்பிடத்தக்கது. உலகிலேயே மிக உயர்ந்த சிகரம் கைலாஷ் 50. கி.மீ தொலைவில் உள்ள தோலிங்கமாட்டா, தாப்பா கிராமங்கள் உள்ளன. இங்கு புத்தருக்கு கோவில்கள் உள்ளன. தியானிமாமண்டியில் சாமான்கள் வாங்க மார்க்கட் உள்ளது. இது தாப்பாவிற்கும் வடக்கே உள்ளது. காய்நிமா என்ற இடத்திலிருந்து வடகிழக்கில் 60 கி.மீ தூரத்தில் உள்ளது கைலாஷ் சிகரம். இந்த ஊர் ஒரு சிறு நகரம் போன்றது.

## கைலாஷ் மலை (சிவபெருமான் உறைவிடம்)

சுற்றளவிலே 40லிருந்து 50 கி.மீ இருக்கும், கோபுரம் போல் தோற்றமளிக்கும் கைலாஷ் மலை 23000 அடி உயரத்தில் உள்ளது. இது எப்பொழுதும் பனியால் மூடப்பட்டு சூரிய ஒளியில் கண்கள் கூசும்

வண்ணம் பளபளவென்று ஜொலிக்கிறது. ஸ்ரீ மஹா தேவனே இருக்கும் இந்த இடம் புராணங்களில் வெள்ளிமலை என்று வர்ணிக்கப்பட்டு, தெய்வீக சாந்நித்யத்திலும் அழகிலும் மிகுந்திருக்கிறது. தர்ச்சனிலிருந்து கைலை மலையும் அதன் சுற்றுப்புறங்களிலும் வடக்கில் தூய வெண்மைச் சிகரமாகவும் தெற்கில் பரந்த வட்டவடிவமான ஆழ்ந்த நீலநிற ஏரியான ராக்ஷஸஸ்தலும் கண்கொள்ளாக் காட்சிகள் மானவரோவர் ஏரியவ்வளவு பெரிதாக இருந்தாலும், ராக்ஷஸஸ்தல் ஏரியை புனிதமாக யாத்ரீகர்கள் நினைப்பதில்லை.

ராக்ஷஸஸ்தல் ஏரிக்குக் கிழக்கே இருக்கும் மானசரோவர் ஏரியையும் கைலாய மலையையும் பிரத்க்ஷிணம் செய்வது இந்தப் புனித மலைகளை தரிசிப்பதன் ஒரு முக்கிய ப்குதி. இந்தப் பிரதக்ஷிணத்தை செய்து முடிக்கும் ஒருவனுடைய ஜன்மம் சாபல்யம் அடைந்ததாக இங்குள்ள லாமாக்கள் கருதுகிறார்கள்.

பன்னிரண்டு வருடங்களுக்கு ஒருமுறை கொண்டாடப்படும் ஒரு விழா (மேளா) விற்கு திபெத்திய லாமாக்களும் பொது ஜனங்களும் இந்த கைலை மலைப் பள்ளத்தாக்கில் வந்து கூடுவார்கள்.

## மானசரோவர் ஏரி
## (புனிதத்தின் பொக்கிஷம்)

கைலாஷ் உச்சியிலிருந்து தென்கிழக்கே 25 கி.மீ தூரத்தில் அமைந்துள்ள மிகப் பெரிய பிரம்மாண்ட மான சமுத்திரத்திற்கொப்பான ஒரு ஏரி மானசரோவர்

கைலாயமலையின் அடிவாரத்தில், பரந்த சமவெளியில் பாய்ந்து, பல ஓடைகளைக் கடந்து ராக்ஷஸஸ்தல் ஏரியில் விழும் இடத்தில் உள்ள கிராமம் வர்க்கா. (இங்கு ராவணன் தவம் செய்ததாகக் கூறப்படுகிறது) ராக்ஷஸஸ்தல் ஏரிக்கும் மானசரோவர் ஏரிக்கும் மத்தியில் வடகிழக்கு முகமாக உள்ள கிராமம் கும்மா அல்லது ச்சியு. என்பதாகும் இங்கிருந்து யாத்ரிகர்கள் புனிதத்தன்மையுள்ளமான சரோவர் ஏரியை முழுதும் கண்டுகளிக்க இயலும் சமுத்திர மட்டத்திலிருந்து சுமார் 16000 அடி உயரத்தில் இருக்கும் மானசரோவர் ஏரி, நான்கு பக்கங்களிலும் சிகரங்களில் பனி மூடிய கருங்கல் மலைகள். ஏரியை இந்தச் சூழ்நிலையில் காண்பது உலகிலேயே வேறெங்கும் காண முடியாத காட்சி உலகத்தில் இந்த மண்ணில் அனுபவிக்க வேண்டிய ஒரு புனிதமான ஏரி மானசரோவர். இதன் அழகு எழுத்திலும் சொல்லிலும் அடங்காது. ஏரித்தண்ணீரில் மேல் அழகிய சிறு அன்னப் பறவைகள் கூட்டங்கூட்டமாக நீந்துகின்றன.

ஸ்படிகம் போன்ற நீர் நிறைந்த இந்த மானசரோவர் ஏரி நீர் இலேசான வெதுவெதுப்பாக இருக்கும். கங்கோத்ரியில் கங்கை, கேதார்நாத்தில் மந்தாகினி, பத்ரிநாத்தில் அலக்தந்தா நதிகளின் நீரைவிட மானசரோவர் ஏரி நீர் வெதுவெதுப்பாக இருப்பதன் காரணம், நீர், நிலையாக இருப்பதாலும், சூரிய ஒளி பட்டுக் கொண்டிருப்பதுவுமே. மானசரோவர் ஏரி அழகின் ஒரு பொக்கிஷம் வட்ட வடிவத்தில் சுற்றளவு 70 கி.மீ உள்ள ஏரி இது. இதைச் சுற்றிலும் பனிமூடிய மலைகள். நடுவில்

ஒரு பெரியதொரு கண்ணாடி பளிச்சிடுவது போன்ற அமைப்பு. இதைச் சுற்றிலும் எட்டு மூலைகளிலும் லாமாக்கள் தவமிருக்கும் விஹாரங்கள் உள்ளன. மானசரோவர் ஏரிகளின் ராணியானவள் தங்கத் தாமரை மலர்களால் அலங்கரிக்கப்பட்டு சுற்றிலும் அன்னங்கள் மிதக்கின்றனவென்று புராணங்களில் சொல்லப்படுகிறது இவையனைத்தும் கைலாசம் மானசரோவரின் சிறப்பாகும்.

ஏத்தனை தபஸ்விகள் மஹான்கள் ஸ்ரேஷ்டர்கள் கால் நடையாகச்சென்று கைலாசத்தைத் தன் வாழ்க்கையில் ஒரு தடவை சென்று காண வேண்டும் என்று வேட்கை கொண்டு சென்று வந்திருக்கிறார்கள்! கைலாய யாத்திரை மேற்கொள்பவர்கள் பொழுது போக்குக்கோ அல்லது இயற்கையை அனுபவிப் பதற்கோ அல்ல. வாழ்க்கையில் செய்த பாபங்கள் நீங்க வாழ்க்கையில் ஒரு குறிக்கோளுக்காகச் செல்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| சூர்கந்தாதேவி | 8,000 | நந்தகாட் |
| தூதோட்ஜி | 12,300 | மக்தூனி |
| ஹேமகுண்ட் | 14,300 | கங்கோத்ரி |
| கங்கோத்ரி | 10,300 | " |
| யமுனோத்ரி | 10,500 | பான்வாலிதர் |
| பௌரி | 5,500 | ஷிவ்லாங் |
| .லென்ட்ஸ்தான் | 5,600 | நீல்கந்தா |
| வசுதாரா | 12,000 | " |
| .ஜோஷிமத் | 6,150 | கீர்த்திஸ்தம் |
| .உத்தரகாசி | 3,500 | பண்டார்பூஞ் |
| கௌமுகி | 12,770 | " |
| .வைதனி | 12,000 | நந்தகண்டி |
| வசுதரா,நீர்வீழ்ச்சி | 13,000 | ஸ்வர்கபூமி |

## உத்தர்கண்டில் தங்க உள்ள இடங்கள்

*பத்ரிநாத்* : பத்ரிநாத் கோவில் கமிட்டியைச் சேர்ந்த பல தங்கும் சத்திரங்கள், தர்மசாலாக்கள் பல ஆசிரமங்கள் நிறைய இருக்கின்றன. தவிர பிர்லா அவர்களுக்கு சொந்தமான ரெஸ்ட்ஹவுஸ், பி.டபிள்யூ.டி இன்ஸ்பெக்ஷன் கட்டிடம், தேவ்லோக் ஹோட்டல் பாங்குதர் தர்மசாலா போன்ற பல தரப்பட்ட குறைந்த வாடகை முதல் அதிக வாடகை வசதிகளுக்குத் தகுந்தாற் போல நிறைய இருக்கின்றன.

*கேதார்நாத்* : பயணிகள் லாட்ஜ், கோவில் ரெஸ்ட் ஹவுஸ், கோவில் கமிட்டியின் கெஸ்ட் ,ஹவுஸ் இருக் கின்றன. தவிர தர்மாசாலாக்கள் யாத்திரிகள் தங்கும் இடங்கள், ஹிம்லோக் ஹோட்டல் போன்றவை இருக்கின்றன.

### *சிறிய ஊர்கள் - தங்த வுசதி.*

*தேவப்ரயாகை* : உத்தரப்பிரதேச டூரிஸ்ட் பங்களா, பி.டபிள்யூ.டி இன்ஸ்பெக்ஷன் ஹவுஸ் உள்ளன.

*ஸ்ரீநகர்* : உத்தரப்பிரதேச இன்ஸ்பெக்ஷன் ஹவுஸ், தாக் பங்களா, காளி கம்லி வாலா தர்மசாலா யாத்ரிகர் கள் ஷெட்டுகள், பத்ரிகேதார் கமிட்டியின் கெஸ்ட் ஹவுஸ் முதலியவை உள்ளன.

*ருத்ரப்பிரயாகை* : காட்டு இலாகா கெஸ்ட் ஹவுஸ், பி.டபிள்யூ.டி. ரெஸ்ட் ஹவுஸ், கோவில் கமிட்டி கெஸ்ட் ஹவுஸ், மற்றும் பல தர்மசாலைகள் உள்ளன.

*கர்ணப்பிரயாகை* : காட்டு இலாகா கெஸ்ட் ஹவுஸ், பி.டபிள்யூ.டி. ரெஸ்ட் ஹவுஸ், யாத்திரிகள் லாட்ஜ்கள், தர்மசாலாக்கள் இருக்கின்றன.

*நந்தப்பிரயாகை* : டூரிஸ்ட் ரெஸ்ட் ஹவுஸ், காட்டு இலாகா கெஸ்ட் ஹவுஸ், பி.டபிள்யூ.டி. ரெஸ்ட் ஹவுஸ், தர்மசாலாக்கள் உள்ளன.

*பிப்பல்கோட்* : கோவில் கமிட்டி கெஸ்ட் ஹவுஸ், காளி கம்லிவாலா ரெஸ்ட் ஹவுஸ், பி.டபிள்யூ.டி. ரெஸ்ட் ஹவுஸ், மற்றும் தர்மசாலாக்கள் உள்ளன.

*ஜோஷிமட்* : யாத்ரிகள் லாட்ஜ்கள், பிர்லா கெஸ்ட் ஹவுஸ், இன்ஸ்பெக்ஷன் பங்களா காட்டு இலாகா ரெஸ்ட் ஹவிஸ், தர்ம சாலாக்கள், குருத்வாரா ரெஸ்ட் ஹவுஸ், காமெட் லாட்ஜ், ஆனந்த்ஹோட்டல், நந்ததேவி ஹோட்டல் போன்ற பலதரப்பட்ட இடங்கள் வசதிக்கேற்ப உள்ளன.

*கோவிந் காட்* : இது பிரபல சீக்கிய ஸ்தலமாகை யால் குருத்வாராக்கள் நிறையவும் லாட்ஜ்களும் நிறைய உள்ளன்.

*ஹனுமான்ச்சட்டி* : காட்டு இலாகா கெஸ்ட் ஹவுஸ், பி.டபிள்யூ.டி. ரெஸ்ட் ஹவுஸ் உள்ளன.

*குப்தகாசி* : கோவில் கமிட்டியின் கெஸ்ட் ஹவுஸ் மற்றும் பி.டபிள்யூ.டி. இன்பெக்ஷன் பங்களா, பல தர்ம சாலாக்கள் உள்ளன. ராம்பார ராம்பூரில் காளி காம்லி வாலாவின் தர்மசாலா உள்ளது. கவ்ரி குண்ட், தேஹரியில் கோவில் கமிட்டியின் கெஸ்ட் ஹவுஸ், பி.டபிள்யூ.டி. பங்களா, டூரிஸ்ட் பங்களாக்கள் உள்ளன.

*உத்தரகாசி* : டூரிஸ்ட் கெஸ்ட் ஹவுஸ், டூரிஸ்ட் லாட்ஜ்கள், காட்டு இலாகா கெஸ்ட் ஹவுஸ், பி.டபிள்யூ.டி. இன்ஸ்பெக்ஷன் பங்களா, பஞ்சாப் சிந்த்தோஷித்திரா பிர்லா, காளி காம்லிவாலா தர்ம சாலாக்கள் டூரிஸ்ட் ஹோட்டல்கள், காஷ்மீர் ஹோட்டல் மற்றும் பண்டாரி ஹோட்டல் போன்றவை இருக்கின்றன.

பௌரியல் முனிசிபல் ரெஸ்ட் ஹவுஸ், பி.டபிள்யூ.டி. ரெஸ்ட் ஹவுஸ், டூரிஸ்ட் பங்களாவும் சௌகாம்பா ஹோட்டலும் உள்ளன. அதேபோல் பங்காச்சட்டியில் யாத்ரிகர்கள் ஷெட்டுகள் உள்ளன.

இதுபோன்ற அமைப்புகள் தங்க உள்ள வசதிகள் பண வசதிக்குத் தகுந்தார் போல உள்ளன.

# பத்ரியில் தங்க வசதியான இடங்கள்

| | | ரூம் நிர் |
|---|---|---|
| 1. ஸ்ரீ சங்கராச்சாரியா | தர்மசாலா | 2 |
| 2. ஜலான் டிரஸ்ட் | தர்மசாலா | 22 |
| 3. மோடி பவன் | " | 6 |
| 4. மித்தல் காட்டேஜ் | " | 6 |
| 5. திருமலை திருப்பதி தேவஸ்தானம் | " | 12 |
| 6. சங்கீர்த்தன் பவன் | " | 4 |
| 7. தாலுக்கா | " | 18 |
| 8. ஜுன் ஜுன் வாலா | " | 3 |
| 9. லெக்ஷ்மிநரசிங் பவன் | " | 12 |
| 10. எஸ்.என்.வி. நிரிஷன் பவன் | " | 6 |
| 11. குஜராத்தி | " | |
| 12. லெக்ஷ்மிநரசிங் பித்தி | " | 12 |
| 13. சாந்த் | " | 8 |
| 14. காளி கம்ளி தூத் வாலி | " | 15 |
| 15. தேவ்லோக் யாத்ரி ரெஸ்ட் ஹெவுஸ் | " | 12 |
| 16. காளி கம்ளி மான்சிங் | " | 18 |
| 17. காளி கம்ளி ஜப்பூரியா | " | 12 |
| 18. சந்த் நிவாஸ் | " | 23 |
| 19. பிர்லா நிகேதன் | " | 14 |
| 20. பிர்லா மங்கள் நிகேதன் | " | 5 |
| 21. நேபாளி தர்மசாலா | " | 12 |
| 22. வதந்குடிர் | " | 12 |
| 23. பாரே பாவ் | " | |
| 24. அஷ்டசாரி | " | |
| 25. சௌமிய நாராயண் | " | 13 |
| 26. பஞ்சாபி சிந்த் அக்ஷரா | " | 28 |
| 27. மாத்வ பவன் | " | 11 |
| 28. பரமார்த்த லோக் | " | 13,40 |
| 29. ரகுநாத் ஆச்ரமம்லக்ஷிமிநாராயண | " | 19 |
| 30. மானவ கல்யாண் | " | 25 |
| 31. ஜாலாராம் மீப்பூர் | " | 4 |
| 32. கீதா மந்திர் | " | 15 |
| 33. பாலாநந்த பிரம்மச்சாரி | " | 17 |
| 34. மகாராஷ்டிர | " | 16 |
| 35. பஞ்னாஷ்டரமம் | " | 35 |
| 36. ஹல்வசிய | " | 17 |

## தனியார் கார் வாகன வசதி விவரங்கள்

| | | ரூ |
|---|---|---|
| ஹரித்வார்-பத்ரிநாத் | 3 நாட்கள் | 3000 -00 |
| ஹரித்வார்-கேதார்-பத்ரி | 5 நாட்கள் | 5000 -00 |
| ஹரித்வார்-சாரோதாம் முழுவதும் | 10-11 நாட்கள் | 9,5000 -00 |

| ரயில் விவரங்கள் | நாட்கள்புறப்பாடு மணி | வருகை மணி |
|---|---|---|
| டெல்லி ஷதாப்தி எக்ஸ்பிரஸ் | 06.00 | 10.30 |
| டெல்லி முசௌரி எக்ஸ்பிரஸ் | 22.25 | 06.15 |
| மும்பை-மும்பை தேராதூன் எக்ஸ்பிரஸ் | 22.20 | 14.30 |
| உஜ்ஜைன்-உஜ்ஜைன் தேராதூன் " | 14.30 | 17.27 |
| வாரணாசி-வாரணாசி தேராதூன் " | 08.55 | 07.25 |
| ஹவ்ரா-ஹவ்ரா தேராதூன் " (கல்கத்தா) | 20.30 | 05.21 |
| அமிர்தசரஸ்-அமிர்தசரஸ் பைச்சேர் " | 21.50 | 10.00 |

(ரயில்வே அட்டவணையையும் பார்த்துக் கொள்ளவும்)

ஆகாய மார்க்கம் - விமானம்

டெல்லி - தேராதூன் (ஜைனகாட்) விமானம் இவைகளுக்கு முன் கூட்டியே பதிவு செய்ய வேண்டிய போன் நம் : 0133-427 450.

## குதிரை சவாரிக்கட்டணம்

| | கி.மீ | குதிரை ரூ. | மட்டக் குதிரைரூ. |
|---|---|---|---|
| ஹனுமான்சட்டி-யமுனோத்ரி திரும்பிவர | 26 | 200 | 500 |
| கௌரிகுண்ட் - கேதாரி கௌரிகுண்ட் | 28 | 300 | 600 |
| கோவிந்த்காட்-கேதார் கோவிந்த்காட் | 28 | 300 | 600 |
| கங்காரியா-ஹேமந்த்குண்ட் | 10 | 200 | 500 |
| கங்காரியா-பூலன்-கி-காட் | 10 | 200 | 500 |

# ஸ்தலங்களின் தூரமும் பஸ் பயணக்கட்டணங்களும்

| ஊர்கள்/ஸ்தலங்கள் | தூரம் | பஸ்கட்டணம் ரூ. |
|---|---|---|
| 1. ஹரித்வார்-பத்ரிநாத் | 324 | 140.00 |
| 2. ஹரித்வார்-கௌரிகுண்ட் | 247 | 120.00 |
| 3. ஹரித்வார்-ஹனுமாச்சட்டி | 252 | 120.00 |
| 4. ஹரித்வார்-கங்கோத்ரி | 295 | 120.00 |
| 5. ஹரித்வார்-கோவிந்தகாட் | 307 | 120.00 |
| 6. ஹரித்வார்-தேவ்லி | 59 | 36.00 |
| 7. ஹரித்வார்-நைனிடால் | 217 | 130.00 |
| 8. ரிஷிகேசம்-பத்ரிநாத் | 301 | 125.00 |
| 9. ரிஷிகேசம்-கௌரிகுண்ட் | 216 | 110.00 |
| 10. ரிஷிகேசம்-ஹனுமான்ச்சட்டி | 220 | 110.00 |
| 11. ரிஷிகேசம்-கங்கோத்ரி | 260 | 110.00 |
| 12. ரிஷிகேசம்-கோவிந்தச்சட்டி | 275 | 100.00 |
| 13. கேதார்நாத்-பத்ரிநாத் | 328 | 120.00 |
| 14. கோட்த்வார்-கௌரிகுண்ட் | 242 | 110.00 |
| 15. கோட்த்வார்-கோவிந்தகாட் | 302 | 125.00 |
| 16. ராம் நகர் - பத்ரிநாத் | 337 | 125.00 |
| 17. ராம் நகர் - கௌரிகுண்ட் | 317 | 110.00 |
| 18. ராம் நகர் - கோவிந்தகாட் | 311 | 110.00 |
| 19. ஹனுமான்ச்சட்டி-கங்கோத்ரி | 222 | 110.00 |
| 20. ஹனுமான்ச்சட்டி-கௌரிகுண்ட் | 300 | 125.00 |
| 21. ஹனுமான்ச்சட்டி-பத்ரிநாத் | 384 | 120.00 |
| 22. கங்கோத்ரி-கௌரிகுண்ட் | 449 | 165.00 |
| 23. கங்கோத்ரி- பத்ரிநாத் | 344 | 135.00 |
| 24. கௌரிகுண்ட்-பத்ரிநாத் | 233 | 110.00 |

# டூரிஸ்ட் கார்கள் போவதற்கும் மற்றும் நடந்து செல்ல வசதியான சாலைகள் விவரங்கள்

| | | |
|---|---|---|
| ஹரித்வார் - கௌரிகுண்ட் | 233 கி.மீ | கார் போகும் சாலை |
| கௌரிகுண்ட் - கேதார்நாத் | 14கி.மீ | நடந்து செல்லும் பாதை |
| கேதார்நாத் - கௌரிகுண்ட் | 14கி.மீ | நடந்து செல்லும் பாதை |
| யமுனோத்ரி - ஹனுமான்ச்சட்டி | 13கி.மீ | மலைப்பாதையில் உயர ஏறிச் செல்லும் பாதை |
| ஹனுமான்ச்சட்டி - கங்கோத்ரி | 215 கி.மீ | கார் செல்லும் பாதை |
| ரிஷிகேஷ - கோவிந்தகாட் | 270 கி.மீ | கார் செல்லும் பாதை |
| கோவிந்தகாட் - ஹேமகுண்ட் | 20கி.மீ | நடந்து செல்லும் பாதை |
| உக்கிமத் - பத்ரிநாத் | 175 கி.மீ | கார் செல்லும் பாதை |
| கௌரிகுண்ட் - பத்ரிநாத் | 229 கி.மீ | கார் செல்லும் பாதை |
| முசோரி - கௌரிகுண்ட் | 245 கி.மீ | கார் செல்லும் பாதை |
| கோட்த்வார் - ருத்ரபிரயாகை | 171 கி.மீ | கார் செல்லும் பாதை |
| ருத்ரபிரயாகை - பத்ரிநாத் | 159 கி.மீ | கார் செல்லும் பாதை |
| ருத்ரபிரயாகை - கௌரிகுண்ட் | 70 கி.மீ | கார் செல்லும் பாதை |
| நைனிடால் - கர்ணபிரயாகை | 212 கி.மீ | கார் செல்லும் பாதை |
| கர்ணப்பிரயாகை - பத்ரி நாத் | 128 கி.மீ | கார் செல்லும் பாதை |
| கங்கோத்ரி - கௌரிகுண்ட் | 334 கி.மீ | கார் செல்லும் பாதை |
| 2 கங்கோத்ரி - கௌரிகுண்ட் | 9கி.மீ | கார் செல்லும் பாதை |

# மானசரோவர் செல்வதற்கு சில விவரங்கள்

| இடம் | தூரம் | விவரங்கள் |
|---|---|---|
| தனக்காப்பூர் | | டாக் பங்களா,மார்க்கட் ஹோட்டல்கள் மற்றும் சில வசதிகள் |
| பித்தோர்கர் | 180 கி.மீ | பஸ் வசதி |
| கான்லிசைனா | 25 கி.மீ | டாக் பங்களா |
| அஸ்கோட்டா | 21 கி.மீ | டாக் பங்களா |
| ஜல்ஜாபி | 8 கி.மீ | மார்க்கட், காளிகௌரி நதி கூடுமிடம் |
| ப்ன்வகோட் | 12 கி.மீ | டாக் பங்களா |
| பார்ச்சூலா | 8 கி.மீ | டாக் பங்களா, கூலிகள் மார்றுமிடம் |
| கேலா | 22 கி.மீ | -- |
| பாங்கு | 12 கி.மீ | 5கி,மீ தூரம் உயரத்தில் கடினமாக ஏற வேண்டிய வழி. |
| சூசா | 3 கி.மீ | நாராயண ஸ்வாமி ஆச்ரமம் 5 கி.மீ தூரத்தில் உள்ளது. |
| சர்டாங் | 3 கி.மீ | --- |
| சீர்க்கா | 2 கி.மீ | தர்மசாலா உள்ளது. |
| ஜிப்பேட்டி | 15 கி.மீ | --- |
| மால்ப்பா | 13 கி.மீ | தர்மசாலா உள்ளது மக்கள் அதிகம் இல்லை. |

| | | |
|---|---|---|
| பூடி | 14 கி.மீ | --- |
| கர்பியாக் | 8 கி.மீ | டாக்பங்களா, தர்மசாலா கிடைக்கும் இந்தியன் மார்க்கட் பார்டர். இந்த இடத்தில் போஸ்ட் ஆபீஸ் இருக்கிறது. அவசிய மில்லாத பொருள்களை விட்டுச் செல்லவும் அவசியப் பொருட்களை வாங்கிக் கொள்ளவும் வசதிகள் உள்ளது. |
| காலாப்பானி | 21 கி.மீ | தர்மசாலா வசதி உள்ளது. மக்கள் தொகையில்லை. |
| ஷாம்காசாம் | 10 கி.மீ | பனி உறைந்த இடம் |
| லீப்பு லேக்(ஏரி) காட்டி | 5 கி.மீ | அதிக உயரமான இடம். |
| பாலா (Pala) | 8 கி.மீ | தர்மசாலா உள்ளது இறக்கமான இடம் |
| டாக்லா கோட் | 8 கி.மீ | கூலிகள் மாற்று இடம் திபேத் மார்க்கட் |
| ரிகான் | 7 கி.மீ | --- |
| கௌரி ஒடிகார் | 5 கி.மீ | --- |
| மாங்ச்சா | 9 கி.மீ | சமவெளி |
| ராக்ஷஸ்கால் | 21 கி.மீ | சமவெளி |
| மானசரோவர் | 10 கி.மீ | பித்தோர் காரிலிருந்து 271 கி.மீ தூரத்தில் அமைந்தது. |

## பெட்ரோல் பம்புகள் உள்ள இடங்கள்:

ஹரித்துவார், ரிஷிகேசம், கோபேஷ்வர், கேர்ரா, நைனிடால், அல்மோரா மற்றும் ராணி கேத் போன்ற பல ஊர்களில் உள்ளன.

பாங்க் வசதிகள் பல ஊர்களில் உள்ளன. ஆனால் எந்த எந்த பேங்க் கிளைகள் இருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். எல்லா பேங்க் கிளைகளும் இருக்கும் என்று சொல்ல முடியாது. டூரிஸ்ட் செக் எடுத்துச் செல்பவர்கள் கேட்டுக் கொண்டு அதற்குத் தகுந்த படி எடுத்துக் கொள்ள வேண்டும்.

பாங்க், தபால் வசதிகளில் கீழ்கண்ட ஸ்தலங்களில் உள்ளன. ஹரித்துவார், ரிஷிகேசம், ருத்ரப்பிரயையாகை, ஸ்ரீநகர், தெஹ்ரி, உக்கிமட், உத்தரகாசி, பிப்ல்கோட், பத்ரி, பூரி, சமோலி, தேராதூன், அல்மோரா, பாங்கோட், பாகேஷ்வர், தேவப்பிரயாகை, குப்தகாசி, த்வார்ஹாட், கால்கோட், கோட்பாரா, ஜோஷிமடம், முசவ்ரி, கர்ணப் பிரய்ாகை, நைனிடால், நந்தப் பிராயாகை, ராணிகேத், மற்றும் உக்கிமட் போன்ற இடங்கள் இந்த வச்திகள் உள்ளன. ஆனால் எந்த பாங்க் கிளைகள் உள்ளன என்பதை மட்டும் முன்னாலேயே கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.

டூரிஸ்ட் விசிட்டர்கள் வழிகாட்டும் செய்டுகள் ஹரித்து வார், ரிஷிகேசம், மற்றும் கன்ஹால் இடங்களுக்குக் கிடைக்கும்.

மற்றும் பல வழித்தட மேப்புகள் போன்றவைகளும் பல விவரங்களும் கிடைக்கும்:-

**கரம் சிங் அமர்சிங்**

**புத்தகக்கடை படா பஜார்**

**ஹரித்துவார் - 249 401**

# மானசரோவர் - கைலாஷ்
# பாதை விவரங்கள்

| ஸ்தலம் | கி.மீ | குறிப்பு |
|---|---|---|
| 1. மானசரோவர் - ஜுகும்பா | 14 | கிராமம் |
| 2. ஜுகும்பா - பர்க்கா | 18 | கைலாஷ் பிரதக்ஷண ஆரம்பம் |
| 3. பர்க்கா - தார்ச்சின் | 8 | -- |
| 4. தார்ச்சின் - லண்டிபு | 6 | ஸிந்து நதி ஆரம்பம் |
| 5. லண்டிபு - டெர்பு | 14 | |
| 6. டெர்பு - கௌரிகுண்ட் | 5 | கடல் மட்டத்திற்கு மேல் 19000 அடி செங்குத்தான உயரம் |
| 7. கௌரிகுண்ட் - ஜண்டால்பு | 20 | இறக்கம் |
| 8. ஜண்டால்பு - தூர்ச்சின் | 10 | மானசரோவிலிருந்து கைலாஷ் பிரதக்ஷணம் முடிவு |

(மானசரோவிலிருந்து மொத்த தூரம் 105 கி.மீ)

*உத்தரகண்ட் கலர் வரைபடம் கிடைக்கும். விலை ரூ. 20/- மணி ஆர்டர் பெயர் & முழு விலாசத்துடன் அனுப்ப வேண்டிய முகவரி :- (மணியார்டர் கிடைத்ததும் வரைபடம் அனுப்பப்படும்)*

**கரம் சிங் அமர்சிங்**
**புத்தகவியாபாரம், படா பஜார்**
**ஹரித்துவார் - 249 401**
**Ph : 0133 - 425619**

## யாத்திரைக்கு அவசியம் எடுத்துச் செல்ல வேண்டிய சில முக்கிய சாமான்கள்

கம்பளங்கள்-2, சாதாரன பெட்ஷீட்-1, சாதாரணப் போர்வை-1, மழைக்கோட்டு-1, 2 செட் அரைநிஜார், முழுபாண்ட், வேஷ்டிகள் வேண்டிய அளவிற்கு, சட்டைகள் பனியன்கள், ஸ்வெட்டர், கம்பளிக்குல்லாய், கம்பளி கை, உரை, கம்பளி கால் உரை, மலை ஏற பூட்ஸ், ஊன்றிச் செல்ல கம்பு,

காணிக்கைகளுக்கு உள்ள பணம், சந்தன ,ஊதுபத்தி, உலர்ந்த பழவகைகள், பிஸ்கட் மற்றும் சில முக்கிய மருந்துகள், (தலைவலி, காய்ச்சல்களுக்கு) இரத்த அழுத்தம் உள்ளவர்கள் அதற்கு வேண்டிய மருந்துகள்.

*கூலிகள்* : தெரியாத இடங்களில் பதிவு செய்யாத கூலிகளிடம் ஏமாறக் கூடாது. கூலி ஏஜென்ஸிகளிடம் அல்லது அதிகாரிகளிடம் அணுகி அவர்களைக் கலந்துக் கொண்டு கூலிகளை அமர்த்திக் கொள்ள வேண்டும்.